ஓம் பரப்பிரம்மணே நம:

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.)



| கமலம்-4. Vol. 4. | சென்னை: சுக்கில௵ வைகாசிமீ 1உ 1929-ம்௵ மேமீ 14உ | இதழ்-38. No. 38. |
|---|---|---|



" கடவுளை நம்பினோர் கைவிடப்படார் " இதை யறியாதார் பலர் செத்துப் பிறக்கும் சிறு மானிடரை நம்பி இலவுகாத்த கிளிபோலாகின்றனர். நம்பிக்கை யென்பது உலகத்தை ஒன்ருகப் பிணிக்கும் ஒரு விலங்குபோல் வது. நம்பிக்கை யில்லாமல் ஒன்றும் நடைபெருது. உண்மையாய்ப் பார்க்கு மிடத்து எல்லாம் நம்பிக்கையினுற்ருன் நடைபெறுகின்றது. பிள்ளைகளைப் பெற்ருேர் அன்பு செய்வதும், குருவைச் சிஷ்யன் உபசரிப்பதும் எல்லாம் நம்பிக்கையையே ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. " தளர்ந்த வயதில் நம் மை யாதரிக்கும் ; நம்மதென்ற யாவும் காப்பாற்றி வைக்கும் " என்ற நம் பிக்கையாலேயே பெற்ருேர் பிள்ளைகளிடம் அன்பு பாராட்டுகிருர்கள். அந்த நம்பிக்கை யில்லாவிடில் அவர்களின் அன்பும் குறையவே செய்யும்.

***

" பெண்டாட்டி யாத்தாள் பேயாத்தாள் " என்று பெற்ருேரை யாத ரிக்காத பேய்மகனும் அந்தப் பெண்டாட்டி சொற்கேட்டு மயங்கிக் கிடப்பதும் ஒரு நம்பிக்கையை முன்னிட்டே. இவள் நம்மை விட்டு அன்னிய புருஷனைப் பார்க்கமாட்டாள் என்ற நம்பிக்கை யில்லாவிடில் ஆண்டவனுனை அவன் அவள் மயக்கில் ஒருபோதும் அகப்படான். அவள் சங்கதியும் அப்படியே. " நாம் அவனுக்கு உட்பட்டு நடந்தால் ஒருபோழ்தும் நம்மைவிட்டு அகலான் " என்னும் நம்பிக்கை யில்லாவிடில் அவளும் அவனை மயக்க எத்தனிக்க மாட்டாள்.

***

" புருஷனைக் கொன்ற பூவையர்கள் " எத்தனையோ பெயரை நாம் பார்த்திருக்கிருேம். அன்னிய புருஷன் ஒருவனை இவன்தான் நம்மை

மாதத் தோரு முறை வெளிப் புகுமிது.

யாதரிக்கத் தகுந்த இரதி சுகத்திற்கேற்ற மணாளன் என்று அவள் நம்பாவிடில் சொந்த புருஷனை விட்டு அவள் நீங்கவும், அன்னிய புருஷ அறிவிலியின் சொற்கேட்டுத் தன் கணவனைக் கொல்லவும் அவள் மனம் துணியாள். இங்ஙனம் கொலை நடத்திவிட்டுப் பின்னொருநாளில், அன்னிய புருஷனாகிய அறிவின் பசையற்ற கொம்பு தன்னைக் கைவிடவே, “அடபாதகா! உன்னை நம்பியல்லவோ உன் பேச்சைக் கேட்டு அக்கினி சாட்சியாய் மணந்த என் கணவனையும் கொன்றேனே, நீயும் இப்பொழுது என்னைக் கைவிட்டனையே, நீ உருப்படுவையா, சந்ததியற்றுப் போகாயா, என்னைப்போல் நின் மனைவியும் பரிதபிக்காளா” என்று அறிவு கெட்ட பேய்மகளொருத்தி பேசும் வழக்கத்தையும் நாம் கேட்டிருக்கிறோம்.

***

“குருவே துணை” என்று முதலில் தலையிற் குட்டிக்கொள்ளும் சிஷ்யன் கூட, வெறும் புண்ணியத்திற்காகமட்டும் குருவை அன்பு செய்யவில்லை. “நாம் இப்படி அன்பு செய்தால் குரு நம்மை ஒருபோதும் கைவிடார். தன் மனதிலிருப்பனவெல்லாம் ஒளிக்காமற் போதிப்பார். நாம் அவைகளைத் தெரிந்து அவரைப் போல நாமும் உலகில் நற்பேரெடுக்கலாம். நல்ல லாபமும் பெறலாம்”— என்னும் நம்பிக்கை யில்லாவிடில் சிஷ்யனுக்குக் குருவிஸ்வாசம் வருவது சந்தேகம்தான். பரஸ்பரம் அந்த குருவும் “இவனுக்கு நாம் தெரிந்தவைகளையெல்லாம் ஒளிக்காமல் போதித்தால், அந்தப் போதனைகளால் முன்னுக்கு வரும் நமது சிஷ்யன் காலாந்தரத்தில் நம்மை யாதரிப்பான்— அல்லது நமது பெயரை உலகில் சிறப்பிப்பான்” என்னும் நம்பிக்கை யில்லாவிடில் அவரும் அவனுக்குத் தமது மனத்துள் கிடந்ததை ஒளிக்காமற் சொல்லார். வஞ்சனையாய்ப் பாடஞ் சொல்லும் குருமாரும் சிலர் உளர். அவர்கள் செய்வது அறிவீனமும் அடாத செய்கையுமே யாயினும், “இவன் நம்மைப் பிற்காலத்தில் மதியான்” என்னும் நம்பிக்கையீனமே அவரை அங்ஙனம் செய்ததென்றுணர்க. நம்பிக்கை யொன்றுமாத்திரம் இருந்திடில் தீயதாயினும் அது நன்மையாகவே தோன்றும். நம்பிக்கையீனமே ஒரு காலத்தில் நன்மையான காரியத்தையும் தீயதென்று ஒதுக்கிவிடும்படி செய்கிறது. நம்பிச் செய்யும் சிஷ்யனுக்குக் குருமொழி உண்மையில் தவறாயிருந்தாலும் அவனது நம்பிக்கையே அவனை முன்னுக்குக் கொண்டுவந்துவிடுகிறது.

***

“நல்ல வேளை வந்தால் எல்லா வியாதியும் தீரும்” என்பது ஒரு பழமொழி. இந்தக் குருமொழி ஒரு குன்மத்தையும் தீர்த்தது. கிராமவாசியாகிய வேளாளனொருவன் நெடுங்காலமாய்க் குன்ம வியாதியால் வருந்தி இனி மகான்களுடைய கிருபை இருந்தாலன்றி வியாதி நீங்குதலரிது என்று திடம் பண்ணிக்கொண்டான். அவனது சில்லரைக்கடை பெரிய வழிநடைப்

---

பாதையிலுள்ளது. அவ்வழியில் வரும் எத்துறவியையும் உபசரித்து அத்துடன் தன் குறையையும் முறையிடுவான். இவர் பொய் வேஷம் பூண்டவர் என்று ஒருவரையும் அவன் கருதினதே யில்லை.

***

"கல உமி தின்றால் ஒரு அவல் தட்டாதா?" எல்லோருமா பொய்வேடம் பூண்டவர்களா யிருப்பார்கள்? உண்மை யுணர்ந்தவர்களும் ஒரு சிலர் இருப்பார்களே. பதினாயிரம் பேர் பொய் வேடம் பூண்டவர்களாய் வரினும் ஒருவரேனும் நல்லவர்களாய்க் கிடைக்கமாட்டார்களாவென்று சொல்லிக்கொள்வான். ஒரு நாள் காஷாயதாரியாய்த் தண்டூன்றித் தாடி வளர்த்த ஸந்யாஸி ஒருவர் வழியோடு போய்க்கொண்டிருந்தார், இவ்வேளாளன் தனக்கு இயல்பாயுள்ள வழக்கபடி அவரை எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து, உபசரித்துத் தன் கடையில் விற்கும் தோசை, நீர் மோர் முதலியன தந்து உண்டபின் வெற்றிலைப் பாக்கும் கஞ்சாவும் கொடுத்தான். அவர் அதையும் வாங்கிக்கொண்டார். சிறிது நேரஞ் சென்றபின் தான்படும் குன்மநோயின் துன்பத்தை வாயினாற் சொல்லாமல் குறிப்பாக அவருக்குக் காட்டினான். அவர் "என்ன அப்பா! வருந்துகிறாய்?" என்றார். அவன் "ஸ்வாமி நெடுங்காலமாய் என்னைப்பற்றி வருத்தும் குன்மநோய்க்கு வகையறியாது வருந்துகிறேன். என் செய்வேன்? தம்போன்ற மகான்களுடைய திருவடியை யன்றி வேறு துணையில்லேன். தங்களுடைய திருவருளிருந்தால் இது தீர்ந்து சுகப்படுவேன்" என்றான். அவர் அதற்கு வேறொரு மருந்துஞ் சொல்லாது—"நல்ல வேளை வந்தால் எல்லா வியாதியும் தீரும்" என்று சொல்லிப் போய்விட்டார்.

***

"காலத்திற்கேற்ற புத்தி" அவனுக்கு உண்டாயிற்று. நல்ல வேளை வந்தால்" என்றதை—நல்ல காலம்—என்று பொருள் பண்ணாமல் நல்ல வேளை (தயிர் வேளை) என்னும் பச்சிலையைக் கொண்டுவந்து உண்டால் வியாதி நீங்குமென்று அவர் சொன்னதாகப் பொருள் பண்ணிக்கொண்டு ஒருவருடனும் சொல்லாமலும் ஆலோசிக்காமலும் கொல்லையிற் போய் நல்ல வேளைக் கீரையைப் பிடி பறித்துவந்து, அவன் பழம் புண்ணாளியல்லவா; மருந்துகளும் மருந்துகளை உபயோகிக்கும் முறைகளும் அவனுக்குப் பழக்கமுண்டே. பழம் புண்ணாளி பாதி வைத்திய னன்றோ; கீரையை நெய்யில் வதக்கி யுண்டான்.

***

"காக்கை உட்காரவும் பனம் பழம் விழவும்" என்றபடி, காகதாளி நியாயமாய் அவன் வினை நீங்குங் காலமும் அந்தக் கீரையை உண்ணுங்காலமும் ஒத்திருந்ததால் ஒரே முறை யுண்டதனாலேயே, உண்ட அன்றைக்கே அவனைப்பற்றிய குன்ம நோயும் ஒழிந்தது. அன்றைக்கு அந்த நோயின் உபத்திரவம் சிறிது இல்லாதிருக்கவே,

***

"துணமது கைவிடேல்" என்றபடி தினந்தோறும் அதை அவ்வாறே உண்ணத் தொடங்கினான். வியாதி நீங்குங் காலமோ, அந்தப் பச்சிலையின்

---

"நான் கோபித்துக்கொள்ளவில்லை; அது என் வழக்கமுமல்ல; நீ கோபியாதிருக்கவே என்னைத் திருத்திக்கொள்ளுகிறேன்" என்றார் ஒரு சாது.

குணம்தானே, அன்றி அந்தச் சந்யாசியின் உறுதிமொழியோ யாது அவனுக்கு அவ்வியாதியை யொழித்து சுகப்படுத்தியது? அவைகள் ஒன்றும் அல்ல, அவன் கொண்ட நம்பிக்கையே அவன் வியாதியை யொழித்துச் சுகப்படுத்தியதென்க. பின் சிலநாட் கழித்து அவ்வழியே திரும்பிவந்த அந்தச் சந்யாசி இவனைக் கண்டு, இவன் வரலாறு உணர்ந்து இவனுக்குச் சொல்லியதும் இதுவே. "அப்பா! உன் வியாதியைத் தீர்த்தது மருந்துமன்று, காலமுமன்று, எனது உறுதிமொழிதானோ, அதுவுமன்று, உன் நம்பிக்கையே.

***

"**நம்பிக்கெட்ட பேரில்லை**" உன் நம்பிக்கை உனக்கு ஸர்வ மங்களத்தையும் உண்டாக்குக—"என்று சொல்லிப் போயினர். நம்பும்படி செய்து பின் அதை மறந்து நம்பிக்கைத் துரோகிகளாய் நரகினுக்காளான எத்தனையோ பேரை யாரும் கேட்டிருக்கலாம். பார்த்துமிருக்கலாம். நம்பிக்கெட்ட பேரை நாம் பார்த்திருக்கமாட்டோம். நம்பிக் கெட்டபேரென்று சிலரை உலகம் மதித்தாலும் அது உலகின் மயக்கேயன்றி உண்மையில் நம்பிக்கெட்டபேரில்லை. நம்பிக் கெட்டாரென்று சிலரை உலகம் மயங்கிக் கூறினும், அம்மயக்கமும் **மனிதரை நம்பினதால் வந்த தாழ்வேயன்றி வேறன்று.** இதுபற்றியே இவ்வியாசத்தின் துவக்கத்திலேயே—செத்துப் பிறக்கும் சிறு மானிடரை நம்பி இலவுகாத்த கிளி போலாகின்றனர்—என்றோம்.

***

"**துட்டுப்பட்டாலும் மோதிரக் கையாற் துட்டுப்படவேண்டும்.**" பிடித்தாலும் நல்ல கொழுக்கொம்பைப் பிடிக்கவேண்டும். இளங்கொம்பைப் பிடித்தால் அது இடையில் முறிந்துவிடும். செத்துப் பிறக்கும் சிறுமானிடரெல்லாம் யோசிக்குமிடத்து இளங்கொம்பரே. நம்மைப்போலப் பிறந்து, நம்மைப்போல வளர்ந்து, நம்மைப்போல இருந்து, நம்மைப்போல இறக்கும் நம்மோடொத்த மனிதரை நாம் நம்பினால் நமக்கு வரும் பயனென்னை? நம்மிலும் அவர் செல்வர், நம்மிலும் அவர் யாதுஞ் செய்ய வல்லவர் என்போமாயின், உரத்தினாலும் நீர்வளம் நிலவளத்தாலும் மற்றக் கொம்புகளைவிட பார்வைக்கு அழகும் சிறப்பும் அடைந்திருந்தாலும் இளங்கொம்பானால் அது இடையில் முறிந்துவிடுவது நிச்சயம். அதுபோலவே நேற்றிருந்து இன்றில்லாத மானுடரை நம்பி அவர் யாவற்றிற்கும் பயன்படுவர் என்று நினைப்பது சித்தி பெறாது. வீழ்வார்க்கு வீழ்வார் துணை யாவதெங்ஙனம்? ஒருக்கால் அவர்கள் நம்பிக்கைத் துரோகிகளாகாமல் நம்பியபடி பயனளிக்கக் கூடியவர்களேயாயினும், அந்தப் பயனும் யோசிக்குமிடத்துப் பலனற்ற பயனாகுமேயன்றி உறுதிப் பயனாகாது. அழியுந்தன்மை யானவர்களாலே செய்யப்படும் பயன் எத்தன்மையா யிருக்கும்? அழியும் பயனாகவே முடியும். உலகமே அழிவதானால் அதிலுள்ள உயிர்களும், அவ்வுயிர்களாற் செய்யற்படும் பயனும் அவ்வாறே பயனற்றதாகுமென்பதில் யாது சந்தேகம்? அந்தப் பயன் நம்பினவர்களுடைய அறியாமையாலும், கட்டுப்பாட்டினாலும் உறுதியாகக் காணப்படினும் கூர்ந்து நோக்கின் அது உறுதியற்ற பயனாவே முடியும். உறுதியற்ற பயனைக்

---

துணிக்குடை யென்று வைதீகர்கள் அதைத் தொடாமல் தாழங்குடையை உபயோகித்து அவ்வளவு பரிசுத்தம் காண்பிக்கின்றனர். ஆனால் அவர்களின் மனதிலோ உலக ஆசைகள், வஞ்சனைகள் மட்டும் விட்டுப் போகவில்லை?

கொண்டு அடையும் சந்தோஷம் யாதாகும்? அற்ப சந்தோஷமாகும். அற்ப சந்தோஷம் அத்துணைச் சிறப்பன்று. உறுதியும் பயனுமுள்ள ஸந்தோஷம் நமக்குக் கிடைக்குமாயின் அது எத்துணை நன்மையாயிருக்கும்? அறிவுடையோரெல்லோரும் எந்த ஸந்தோஷத்தைப் பெற விரும்புகிறார்கள்? உறுதியும் பயனுமுள்ள ஸந்தோஷத்தையே விரும்புகிறார்கள்? இப்பொழுது உலகில் கொஞ்சகாலம் அநுபவிக்கும் ஸந்தோஷத்தை அற்ப சந்தோஷமென்றும், அனுபவிப்போரை 'அற்ப ஸந்தோஷி' யென்றும் சொல்வது ஸர்வசாதாரண வழக்கமா யிருக்கின்றது. உள்ளபடியே எவ்வளவு அதிககாலம் அனுபவிக்கினும் உலக ஸந்தோஷமாயின் அது அற்ப ஸந்தோஷமாகவே இருக்கும். அதிலும் கொஞ்சகாலம் அனுபவிக்கும் ஸந்தோஷத்தை அற்ப ஸந்தோஷமென்று ஒதுக்கிவிடுகிறார்களானால், என்றும் நிலையாயுள்ள ஸந்தோஷத்தில் யாருக்கும் விருப்பமிருக்குமென்பது சொல்லாமலே அமையவேண்டும். அங்ஙனமாயின்,

* * *

**"என்றும் நிலையாயுள்ள ஸந்தோஷம் யாது?"** அது மோக்ஷநிலையே. அற்ப ஸந்தோஷத்தைத் தருவதாகிய உலக காரியங்களிற் சித்தி பெறுவதற்கே நாம் எவ்வளவு முயற்சி யெடுக்கிறோம்? யார் யாரை நம்புகிறோம். முயற்சி எடுத்தும் நம்பியும் அந்த அற்பஸந்தோஷமுமே ஒருகாலத்தில் நமக்கு அரிதாய் முடிகிறது. என்றும் நிலையாகவுள்ளதாய், எல்லோராலும் விரும்பப்படுவதாய் உள்ள நித்திய ஸந்தோஷத்தையடைய நாம் எவ்வளவு முயற்சி புரியவேண்டும்? அது தருபவரை நாம் எப்படி நம்பவேண்டும்?

* * *

**"பாடுபட்டுழைத்தாலன்றே வீடுகட்டி வாழலாம்?"** அந்த மகத்தான ஆநந்தநிலை இலகுவில் கிடைக்கக்கூடியதா? அந்த நித்ய ஸந்தோஷம் நமக்கு சுலபமாய்க்கிடைக்க யாது செய்யவேண்டும்? செத்துப் பிறக்கும் சிறு மானுடரை மதியாது சாவாது நிலைநிற்கு மூவா முதல்வரைச் சதா நம்புதல் வேண்டும். செத்துப் பிறக்கும் சிறு மானிடர் எவ்வளவுதான் செல்வராய்க் காணப்படினும், அப்படிக் காணப்படுதல் நமது அறிவு மயக்கத்தினாலன்றி உண்மையில் அவர்கள் செல்வர்களல்லர். நாம் அவரை நம்புதலும் வீண். நம்பினும் அவர்கள் நமக்குச் செய்வதொன்றுமில்லை. செய்யவும் அவர்களால் முடியாது. செய்யும் வல்லமையும் அவர்களிடத்திலில்லை. உறுதியாக நம்பினால் நமக்கு நித்ய பயனளிக்கத் தகுந்தவர் கடவுள் ஒருவரே. அவரே நித்யர். அவரால் எல்லாம் செய்ய முடியும். மனிதனாலாகாத காரியத்தை அவர் செய்து முடிப்பார். சபையில் வீஷ்டுமரில்லையா? துரோணரில்லையா? சல்லியரில்லையா? விதுரரில்லையா? மற்றை யரசர்களில்லையா? அவர்களே வேண்டாம்; ஐம்புலன்களும்போல ஐவரும் இல்லையா? "ஐயோ!" என்றலறின துரோபதைக்கு ஆர் உதவினர்? அவள் நம்பிக்கை யாது பயனாய் முடிந்தது? ஆருமற்ற பரதேசியைப்போல அவளைப் பரதவிக்கும்படி செய்ததேயன்றி அந்த நம்பிக்கை யாதொரு பயனையும் தரவில்லையே. என்? செத்துப் பிறக்கும் சிறு மானுடரை

---

நாலணா தாழங்குடை மழையையும் வெயிலையும் தாங்குவதுபோல் துணிக்குடை தாங்காதாயினும், வெளிப்பகட்டையும் சௌகரியத்தையும் விரும்பித் தாழங்கொடையை மதிப்பதில்லை. எல்லாம் காசின் மகத்துவமே!

நம்பினுல் பின் அது யாது பயனைத் தரும்? கடைசியில் அவளைக் காத்தது யாது? ஒப்பற்ற பரம்பொருளை நம்பின நம்பிக்கை யொன்றே. "ஓ இருதய வாசா!" என்று ஓலமிட்ட அந்த நிமிஷமல்லவா அவள் நம்பிக்கை பயன்பட்டது. வீஷ்டுமர், துரோணர், விதுரர், சல்லியர், மற்றையரசர்கள், பாண்டவர் முதலியவர்களைவிட சாதாரண மானுடர் நம்பிக்கையில் உயர்ந்தவரா? பந்துக்களாய், அதிவிவேகிகளாய் நன்கு மதிப்புடையவராய்ச் சிறந்த அவர்களே இவளுடைய நம்பிக்கையைத் திருப்தி பண்ணக்கூடியவர்களா யில்லாமற் போனபோது சாமான்யர்களிடமிருந்து ஒரு உதவியைப் பெற எப்படி நம்பலாம்? ஏழை அறிவினர் உண்மையுணராராய் அற்ப வாழ்வொன்றையே கருதி, அதையே நிலையென்றெண்ணி அதன்பொருட்டுத் தம்மோடொத்த மானுடரை நம்பினும், அந்த நம்பிக்கையை நிறைவேற்ற அச்செல்வர்களும் சக்தியற்றவர்களா யிருக்கிறுர்கள். அதை அறிந்துகொள்ளவும் ஏழை அறிவினர்களுக்குச் சக்தியில்லை.

*
* *

"ஆதிமூலமே யென்றழைத்த ஆனைக்கு உதவினவர் யார்?" மடுவில் முதலையாற் கௌவப்பட்டு யாரை அது நம்பினது? தன்னோடொத்த அற்ப மிருகங்களையா? அல்லது நம்மோடொத்த அற்ப மானுடரையா? அல்ல, அல்ல; எல்லாம்வல்ல ஒரு முழுமுதற் பொருளையே. அந்த நம்பிக்கையின் அருமையை அறிந்ததும் அந்த ஒப்பற்ற பரம்பொருளேதான். அந்தப் பொருளின் அருமையை உள்ளவாறறிந்து ஆதிமூலமே என்றழைத்த அந்த யானை யாது பயனைப் பெற்றது? என்றும் அழிவில்லாத நித்திய ஸந்தோஷத்தைப் பெற்றது. **இதனுல் நம்பிக்கை யார்பால் வைக்கத்தக்கது? கடவுள்பால்.** கடவுளர்பால் வைக்கும் நம்பிக்கை எப்படிப்பட்டது? **விலையேறப் பெற்றது. தக்க பயனைத் தரத்தக்கது.** பேரின்ப வீட்டினைக் கொடுக்கத்தக்கது. அதை எப்படிச் செய்யவேண்டும்? இடையருது செய்யவேண்டும். அவ்வண்ணம் துதிசெய்து "**கடவுளை நம்பினேர் கைவிடப்படார்**" என்றுமே.

## இன்னும் மனநோயை அதிகப்படுத்தவா?

இரண்டு வியாபாரிகள்; ஒருவருக்கொருவர் வெகு நண்பர்கள்; உயிரும் கலந்து நின்றவர்கள். சரக்கு கொள்ளும் விஷயத்தில் ஏதோ சச்சரவு வருகிறது. மனஸ்தாபம் முளைக்கிறது. ஒருவரின் கடிதம் மற்றவர்க்கு இல்லாது போகிறது. பிறகு ஒருவர் வலியக் கடிதம் எழுதுகிறுர். அதற்குப் பதிலே வியாபார நண்பர் தாமே எழுதாமல் தமது குமாஸ்தாவைவிட்டு எழுதச் சொல்லிவிடுகிறுர். அக்கடிதத்தைப் பெறும் வர்த்தக நண்பரது மனமோ ஏமாறிச் செந்தணலாகின்றது. தன் கடிதம் எதிர்பார்த்தவருக்கு இப்படிச் செய்வது இன்னும் மனநோயை அதிகப்படுத்தவா?

'அறிந்தவன் துணியலாம்.'

அமிர்தகுணபோதினி

சுக்கிலஸு வைகாசிமீ 1உ

# ஐந்து வகை உழைப்பு.

—(❀)—



ராய்ச்சி ஒரு தனி இன்பம். அதன் மாண்புமிக்க சுவையினை வேறெதனிலும் காண இயலா. ஆராய்வாருக்கு அடுத்தடுத்து அநந்தமான விஷயங்கள் அன்னோர்தம் அறிவின் ஊற்றுக்கண்ணே புலனாகும். ஆராயுந்தோறும் அறிவு தெளிவாகும்; விவேகம் விசாலிக்கும்; புத்தி கூர்மைப்படும். "உழைக்கும் புதிய தமிழன் வாழ்க"—என்று சென்ற ஸஞ்சிகையில் மங்களம் கூறினோம். இந்த ஸஞ்சிகையில் அந்த உழைப்பு எத்தனை வகைப்படுமென்று சற்று விசாரிப்போம். உழைப்பு என்பது திரவிய உற்பத்திக்கு இன்றியமையாத சாதனங்களில் ஒன்றென்பதை யாவரும் அறிவர்.

நாம் நாடோறும் புசிக்கிற அன்னத்தைச் சமைத்தவன் சமையற்காரன். அவனுடைய உழைப்பு இல்லாவிட்டால் சாதம் கிடையாது. ஆகையால் சமையற்காரனுடைய உழைப்பு அரிசியைச் சாதமாக்குவதற்கு இன்றியமையாத சாதனமெனத் தகும். அரிசியைச் சமையற்காரனிடம் கொடுப்பதற்கு முன்னே அதைக் குத்தித் தீட்டவேண்டும், குத்தித் தீட்டுவதற்கு முன் நெல்லை உமிபோக்கி அரிசியாக்கவேண்டும். நெல்லைக் கடையிலிருந்து ஒருவர் வாங்கி வரவேண்டும். கடைக்காரன் நாட்டுப்புறத்துக்குப் போய் நெல்லை வாங்கிவருகிறான். நாட்டுப்புறத்தில் குடியானவர்கள் நெல்லைப் பயிர் செய்கிறார்கள். நெல்லைப் பயிர்செய்து சமையற்காரனிடம் வருகிறவரையில் பல பேர் அது விஷயத்தில் உழைக்கிறார்கள். அவர்கள் உழைப்பெல்லாம் சமையற்காரனுடைய உழைப்பைப்போல் விசேஷமானதுதான். அவ்வுழைப்பில்லாவிடில் நெல் விளையாது. விளைந்தாலும் வீடுவந்து சேராது. இவ்விஷயத்தில் உபயோகப்பட்ட பலவகை உழைப்புக்கும் அரிசியின் விலையே பிர

---

ஒன்றில் பட்டறிந்தவுடன் தோன்றும் நல்லறிவு முன்னாலேயே தனக்குள் உதயமாகி யிருந்தால், பல தொல்லைகளினிடையில் அகப்பட்டு நசுங்க வேண்டியதில்லைதான்! ஆனால் அது முடிகிறதா?

யோஜனமாகும். அதில் வேலைசெய்த உழைப்பாளிகளுக்குத் தகுந்த கூலி கிடைக்காவிடில் அவர்கள் அவ்வேலையைச் செய்திருக்க மாட்டார்கள். நெல்லும் அகப்படாது.

நெல் விளைந்து வீட்டுக்குக் கொண்டுவருவதற்கு மேற்சொல்லிய உழைப்பைத் தவிர வேறு சில கருவிகள் உண்டு. ஏரும் கலப்பையும் நிலத்தை உழுவதற்கு வேண்டிய கருவிகள். அவற்றைச் செய்தவர்கள் கருமார். அவர்களுக்கு இரும்புச் சன்னமும் விறகும் வேண்டும். இரும்புச்சன்னத்தைப் பூமியிலிருந்து வெட்டி எடுப்பவர் சிலர். அதை உருக்குவதற்குச் சாலைக்குக் கொண்டுவருபவர் சிலர். உருக்கும் தொழிலில் உழைப்பவர் சிலர். உருக்கியான இருப்புப் பாளங்களைக் கடைக்குக் கொண்டுபோகுவோர் சிலர். அதை விற்று வியாபாரம் செய்குவோர் சிலர். விறகும் இப்படியே. **நாம் புசிக்கிற அந்த ஒரு சாதத்துக்கு இவ்விதமாக இத்தனை பேர் உழைப்பும் வேண்டியிருக்கிறது.**

இந்தப் பலவகைப்பட்ட உழைப்பில் சமையற்காரனுடைய உழைப்பு மட்டும் நேருக்குநேராகப் பிரத்தியக்ஷமாய்த் தெரிகின்றது. மற்ற உழைப்பெல்லாம் யோசித்துப் பார்த்தால் தான் தெரியவரும். இருப்புச் சன்னத்தை வெட்டி யெடுப்பது முதல், நெல்லைக்குத்தி அரிசியாகச் செய்வது வரைக்குமுள்ள உழைப்பு பரம்பரையாக உபயோகப்படுகின்றது. பரம்பரையாக உபயோகப்படுகிற உழைப்பை இவ்வளவென்று தீர்மானிப்பது அருமை. அது கணக்குக்கு அடங்காது. மேற்சொல்லிய வேலைக்காரரெல்லாம் அரிசி விலையாகிற வரைக்கும் கூலி பெறுகிறதற்காகக் காத்துக் கொண்டிருப்பதில்லை. கடைக்காரனிடத்தில் அரிசி வாங்கும்போது அவனுடைய உழைப்புக்கும், அவனுக்கு முன் உழைத்த வேலைக்காரருடைய வேலைக்கும் போதுமான பிரயோஜனத்தை அரிசியின் விலையாகக் கொடுக்கிறோம். நெல்லை வியாபாரி வாங்கும்போது, அதைப் பயிரிட்டது முதலாகிய பலவித உழைப்புக்கு அவன் பிரயோஜனம் செய்கிறான். இவ்வாறே ஒவ்வொரு வியாபாரியும் தனக்கு முன்னிட்ட உழைப்பாளிகள் யாவருக்கும் மொத்தமாகப் பணம் கொடுத்துப் பொருள்களை வாங்குகிறார்கள்.

சில சமயங்களில் சாமான்களைத் தூர தேசங்களிலிருந்து கப்பல் வழியாகக் கொண்டுவருகிறோம். நமக்கு வரப்பட்ட பளிங்கு சாமான்களும், வஸ்திரம்—காகிதம் இன்னும் இது போன்றவைகளும் இங்கிலாந்து தேசத்திலிருந்து கப்பலில் கொண்டுவரப்படுகின்றன. அப்பொருள்களை விலைக்கு வாங்கும்போது கப்பல் செய்த வேலைக்

---

ஒன்றில் ஆவல்தோன்றி அதைக் கண்டோ அநுபவித்தோ தீர்ந்தவுடன் சாந்தி. பின்பு மறுபடியும் அந்த ஆசை தோன்றி அந்த இன்பம் ருசிக்க மனம் அவாவுகை—இதுதான் விட்டுப்போகாத—திருப்திபடாத உலகப்பற்று.

காரருக்கும். கப்பலோட்டிகளுக்கும் அவரவர்கள் உழைப்புக்குத் தக்கபடி பிரயோஜனம் செய்கிறோம். சாமான்களை ஓரிடத்திலிருந்து வேறோரிடத்துக்குக் கொண்டுபோகிற வண்டிக்காரருடைய உழைப்பும், அவ்வண்டிகளைச் செய்த தச்சருடைய உழைப்பும் மேற்சொன்ன மாதிரியாகவே பிரயோஜனங்கள் பெற்றுக்கொள்ளுகின்றன. இவர்களுடைய உழைப்பெல்லாம் ஒருவனுக்குப் பின் அவனைச் சேர்ந்த மற்றொருவனாக, அதாவது தந்தைக்குப் பின் அவன் குமாரன், அவனுக்குப் பின் அவன் குமாரனாக பரம்பரையாகத் தொடர்ந்து செய்துவரும் உழைப்பாகும். இந்த உழைப்பு ஐந்து வகைப்படும். அவற்றை ஒவ்வொன்றாகக் கீழே சொல்லி விவகரிப்போம்.

## I

முதலாவது:—சாமான்களை உற்பத்தி செய்கிற உழைப்பு :— வீடு கட்டவேண்டுமானால் மரம், கல், சுண்ணாம்பு முதலிய சாமான்களை முதலில் சேகரித்து வைக்கவேண்டும். இந்த சாமான்களைக் கொண்டு கொத்தரும் தச்சரும் இன்னும் சிற்சில கூலி ஆட்களும் சேர்ந்து வீட்டைக் கட்டி முடிப்பார்கள். கொத்தர் முதலான வேலைக்காரருக்குப் பயன்படுவதால் கல், மரம் முதலானவற்றைச் சாமான்கள் என்று சொல்கிறோம். பருத்தி பயிர் செய்கிறவர்களுடைய உழைப்பெல்லாம் பின்னிட்டுத் துணி செய்கிறவர்களுடைய வேலைக்குச் சாமான் உண்டாக்குவது தான். திருநெல்வேலி ஜில்லாவிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களிலும் விஸ்தாரமாகப் பருத்தி பயிர் செய்கிறார்கள். அந்தப் பருத்தி விளைந்தபின்பு அதைக் கொட்டை போக்கி இங்கிலாந்து தேசத்துக்கு அனுப்புவார்கள். அங்கே இருக்கிற கைக்கோளர் யந்திர சாதனங்களைக்கொண்டு விதம் விதமான ஆடைகளைத் தயாரிப்பார்கள். கைக்கோளருடைய வேலைக்கு உதவிய சாமான் பருத்தியாகும். அப்பருத்தியை உற்பத்தி செய்தவர்கள் திருநெல்வேலி, இராமநாதபுரம் ஜில்லாக்களைச் சேர்ந்த ரெட்டிமார்களும், நாயக்க மரபினருமாவார்கள். ஆகையால் அந்த ரெட்டிமார்கள், நாயக்கமார்கள் ஆகிய இவர்களின் உழைப்பெல்லாம் வேலைக்கு உதவுகிற சாமான்களை உற்பத்தி செய்வதற்கு உபயோகப்பட்டன. இவ்விதமே, கப்பல் செய்யவேண்டுமானால் மரமின்றி முடியமாட்டாது. அந்த மரத்தை வெளித்தேசங்களிலிருந்தும் நாட்டிலிருக்கிற சில காட்டிலிருந்தும் கொண்டுவருகிறோம். காடுகளில் அநேக கூலியாட்களை நியமித்து மரங்களை வெட்டிச் சாய்த்து அவற்றைத் துண்டுகளாக்கிச் செதுக்கி வெளிக்கு அனுப்புகிறது

---

உன் மீது முன்னைப்போல் அவ்வளவு பிரியமில்லாதவர்களிடம்—உன்னைப் பெருமையாய் எண்ணாதவர்களிடம் ஏன் அதிகம் நெருங்கி மதிப்பையிழக்கிறாய். காலம்போல் நட. முந்திய அன்புக்கு ஏங்காதே.

வழக்கம். மேற்சொல்லிய ஆட்களுடைய உழைப்பினுல் கப்பல் வேலைக்குச் சாமான் உற்பத்தியாகின்றது. ஆதலால் அவர்களுடைய உழைப்பு—சாமான் உற்பத்தி செய்கிற உழைப்பாகும். நெல் முதலாகிய தானியத்தைப் பயிர் செய்கிறவர்களுடைய உழைப்பும் இப்போது பேசிவரும் வகுப்பில் சேர்ந்தது தான். தானியமெல்லாம் சமையற்காரனுடைய வேலைக்குச் சாமானுகின்றது. இவ்வகுப்பில் சேர்ந்த வேலைகள் பல உள. அவற்றையெல்லாம் சாமான்களை உற்பத்தி செய்கிற உழைப்பாகவே பாவிக்கவேண்டியது.

## II

இரண்டாவது— "கருவி செய்யும் உழைப்பு":—பரம்பரையான வேலைகளில் முதலாவது இன்னதென்று ஒருவாறு சொல்லி முடித்தோம். இனி, இரண்டாவதான உழைப்பு எப்படிப்பட்டதென்று ஆலோசித்துப் பார்ப்போம். தச்சனுடைய வேலைக்கு மரம் இன்றியமையாத சாமான். மரம் இல்லாவிடில் தச்சன் வேலை செய்ய இடமிராது. மரத்தைப்போலவே உளி முதலிய கருவிகளும் இன்றியமையாத சாதனங்களாம். உளி இல்லாமல் தச்சன் வேலை செய்ய முடியாது. தச்சனுடைய வேலைக்கு இன்றியமையாததாகிய மரத்தை உற்பத்தி செய்கிறவர்களுடைய உழைப்பைச் சாமானுற்பத்தி செய்கிற உழைப்பு என்று சொன்னேம். அவனுடைய உளி முதலிய கருவிகளையும் முன்னதாக ஒருவன் செய்திருக்கவேண்டும். அந்த உழைப்பே "கருவி செய்யும் உழைப்பு" என்று சொல்லப்படும். இவ்வுழைப்பில்லாமல் அநேக வேலைகள் முடியாது. சாமானும் கருவியும் இன்றி யாதொன்றும் நிறைவேறுவதாகக் காணேம். வண்டி செய்வதற்குப் பலகையும், உளி, வாள் முதலிய கருவியும் வேண்டும். இவற்றில் எதைச் சாமானென்றும், எதைக் கருவி என்றும் கொள்கிறது? சாமானுக்கும் கருவிக்கும் இருக்கிற வித்தியாஸமென்ன? மரமும் கல்லும் வீடு கட்டுவதற்குச் சாமான்களாய் இருக்கின்றன. வீடு கட்டி ஆனபின்பு மரத்தையும் கல்லையும் அதினின்று பிரித்தெடுத்தல் முடியாது. உளி முதலியவைகளோ வென்றால் அநேக வீடுகள் கட்டுவதற்கு உபயோகப்படும். ஆகவே தெரிகிறது என்ன? ஒரு வேலைக்கு உபயோகப்பட்டு அதினின்றும் பிரிக்கப்படாதவையெல்லாம் சாமான்கள் என்று சொல்லப்படும். பல வேலைகளுக்கு உபயோகப்படுகிறதெல்லாம் கருவி என்று சொல்லப்படும். கலப்பையும் மண்வெட்டியும் கருவிகள். பட்டும் பருத்தியும் சாமான்களாகும். கருவி செய்கிற உழைப்பெல்லாம் இரண்டாவது வகுப்பில் சேர்ந்த பரம்பரையான உழைப்பாகும்.

---

அவனவன் தன்மைக்கேற்ப அவனவனுடன் பழகிச் சற்றுத் தூர நில். அதிகம் நெருங்குவதென்பது எல்லோரிடமுமே கூடாது; அதற்கென இரண்டொருவரே கிடைப்பர், அவர்களிடமும் பணம் சங்கதியில் பகை வருமாம்.

## III

மூன்றாவது—"பாதுகாக்கும் உழைப்பு":—உழைப்புக்குச் சாமானும் கருவியும் வேண்டுமென்றும், அவைகள் இல்லாமல் ஒரு வேலையும் நிறைவேறமாட்டாதென்றும் இதுவரைக்கும் சொன்னோம். உழைப்புக்கு இவைகள்மாத்திரம் போதாது. கைக்கோளர் துணி நெய்கிறதற்கு நூலும் கருவியும் மாத்திரம் இருந்தால் வேலை நிறைவேறாது. வேலை செய்வதற்குத் தக்க இடமும் வேண்டும். வண்டி செய்வதற்கு மரமும் உளி முதலிய கருவியும் தவிர ஒரு தகுந்த இடமும் வேண்டும். அந்த இடத்தைத் தச்சுவாடி என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். நெல் விளைந்த பின்பு அதைப் பதர் நீக்குதற்குக் **களமும்**, நெல்லைக் கொட்டிவைப்பதற்குக் **களஞ்சியமும்** வேண்டியிருக்கிறது. பயிரிடுவதற்கு மாடுகள் அவசியமல்லவா? அவற்றைக் காற்றிலும் மழையிலும் அடிபடாதபடி காக்கும் பொருட்டு ஒரு **கோட்டகை** இருந்தால் தான் அவைகளும் க்ஷேமமாய் இருக்கும். **தச்சுவாடி, களஞ்சியம், கோட்டகை** இதற்குப் **பாதுகாக்கும் உழைப்பு** என்று சொல்லப்படும். ஆடு மாடு மேய்க்கிற இடையர் உழைப்பெல்லாம் மேற்கூறிய வகையில் சேர்ந்தவைதாம். பயிர்களை ஆடுமாடுகள் மேய்ந்து விடாதபடி வயல்களைச் சுற்றி வேலி போடுவதுண்டு. வேலி போடுகிற உழைப்பும் பாதுகாக்கிற உழைப்பென்று சொல்லப்படும். தோட்டத்தைச் சுற்றி சுவர் கட்டுகிற வேலையும் அப்படியே. நியாயாதிகாரியின் உழைப்பும், போலீஸ் சேவகர் உழைப்பும் தேசத்திலுண்டாகிற திரவியத்தை ஒழுங்கானவழியில் காப்பாற்றும் பொருட்டு உபயோகப்படுகின்றது. ஆகையால் அவர்களுடைய வேலையையும் மேற்சொல்லிய வகுப்பிலேயே சேர்த்துப் பேசவேண்டும்.

## IV

**நான்காவது—"கொண்டுபோகிற உழைப்பு"**:—கிராமங்களில் தானியம் விளைந்தபின்பு அது எவ்விதமாக ஜனங்களுக்குப் பயன்படுகின்றது? விளைந்த இடத்திலேயே அது இருக்குமானால் ஒருவருக்கும் உபயோகப்படமாட்டாது. நமது வீட்டில் பிறந்த பெண் இன்னொரு வீட்டிற்கு வாழப்போவதுபோல, அதுவும் விலையாகிற இடத்துக்குக் கொண்டுபோகவேண்டும். ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்துக்குச் சரக்கு கொண்டுபோகவேண்டுமானால், தரையிலாவது, ஜலத்தின்மேலாவது கொண்டு போவார்கள். தரையின் மேல் போவதற்கு வண்டிகளும் கூலி ஆட்களும் வேண்டும். புகைவண்டி போகிற இடமானால் அதன் வழியாகச் சரக்குகளை எளிதில் அனுப்பலாம். ஜலத்தின்மேல் சாமான் கொண்டுபோகவேண்டுமானால் கப்பலாவது

---

என்னதான் உற்சாகத்தை மனதில் உற்பவித்துக்கொண்டு உழைக்கத் தொடங்கினாலும், வீட்டிலுள்ளோர் மனம் கோணினால் அத்தனையும் பாழ்தான்.

தோணியாவது இருக்கவேண்டும். இப்படிப் பல விதமாக சாமான் களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குக் கொண்டுபோ வார்கள். கொண்டுபோகிற உழைப்பெல்லாம் நாம் சொல்லி வருகிற நான்காவது வகுப்பில் சேரும். வண்டி, கப்பல், தோணி, ரோட்டு முதலானவற்றைச் செய்த உழைப்பும் மேற்படி வகுப்பில் சேர்ந்தது தான். சாமான்களை ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குக் கொண்டு போய் விற்று ஜீவனம் செய்கிறவர்கள் அநேகர் உண்டு. சென்னப் பட்டணத்து நடுவே நெல் விளைகிறதில்லை. அங்கிருக்கிற ஜனங்க ளுக்கு வேண்டிய நெல், கம்பு, கேழ்வரகு முதலிய தானியமெல்லாம் வெளித் தேசத்திலிருந்து புகைவண்டியிலாவது, கட்டை வண்டியி லாவது, தோணி அல்லது கப்பலிலாவது கொண்டுவரப்படுகின்றது. கொண்டுவருவதற்கு அநேக ஆட்கள் உழைக்கிறார்கள். அவர்க ளுடைய உழைப்பும், வண்டி முதலான கருவிகளைச் செய்த உழைப் பும் இல்லாமல் நாட்டுப்புறங்களில் விளைந்த நெல் சென்னப்பட்டணம் வந்து சேராது. தானியத்தை விளைவிக்கிற உழைப்பைப் போலவே அதைக் கொண்டுவருகிற உழைப்பும் விசேஷமானது. இந்த உழைப் பெல்லாம் தானியத்தின் விலையாற் பிரயோஜனம் அடைகின்றது. சென்னப்பட்டணத்தில் கட்டியிருக்கிற வீட்டுக்கு விஸ்தாரமான மரம் செலவாயிருக்கிறது. இந்த மரம் சென்னப்பட்டினத்தில் விளை கிறதல்ல, வெளித்தேசங்களிலுள்ள காடுகளிலிருந்து வெட்டி புகைவண்டியிலாவது, கட்டை வண்டியிலாவது, கப்பல் மார்க்கமா யாவது கொண்டுவருகிறார்கள். அங்கிருந்து வந்தாலொழிய வீட்டில் மரவேலை நிறைவேறாது; வீடு கட்டவும் முடியாது. மரவாசற்படி யும், மரத்தில் செய்த கதவும், வீட்டிற்குமேல் போட உத்தரங்களும் இல்லாமல் ஒரு வீடு ஆகுமா? வெளியிலிருந்து மரம் கொண்டுவரு வதற்குச் செலவு அதிகமாய்ப் பிடிக்கும்; அந்தச் செலவையும் மரத்தின் கிரயத்தையும் கொடுத்து அதை வாங்கி வீடு கட்டுவார் கள். ரோட்டுகளெல்லாம் துரைத்தனத்தாரால் போடப்படுகின் றன. ஆயினும், அதற்குச் செல்லும் செலவை நிலவரியாகவும் ரோட்டுவரியாகவும் குடித்தனக்காரர் கொடுத்துவருகிறார்கள்.

## V

ஐந்தாவது—"மனோ வுழைப்பு":—வீடு கட்டுவதற்குச் சாமா னும் கருவியும் போல, இன்னவிதமாக வீடு கட்டி முடிக்கவேண்டு மென்ற அறிவும் இருக்கவேண்டும். கல்லும், மண்ணும், மரமும் மாத்திரம் இருந்தாற் பயனில்லை. வீடு கட்டுந் தொழில் தெரிந் திருக்கவேண்டும். இதற்கு வேண்டிய யுக்தி புத்திகளுக்கு "மன உழைப்பு" என்று சொல்லப்படும். கொத்தனிடத்தில் வேலை செய்து வீடுகளும், மண்டபங்களும், ஆலயங்களும் எவ்விதமாகச் சமைப்ப தென்று கற்றறியவேண்டும். அதற்கு மன உழைப்பின்றி முடியாது. எல்லா உழைப்பிலும் மன உழைப்புக்கு விலையும் பெருமையும் அதி

கம். பயிரிடுவதற்கும் மன உழைப்பு வேண்டியிருக்கின்றது. பயிரிடுகிற சாஸ்திரத்தை நன்ருய்த் தெரிந்துகொள்ள வேண்டுமாஞல் நாலைந்து வருஷம் அதற்கென்றுள்ள வித்தியாசாலையில் கற்பதோடு விவசாயத்திலும் பழகி அறியவேண்டும். இந்த அறிவு மன உழைப்பாகும். எத்தொழிலிலாவது தேர்ச்சி யடையவேண்டுமாஞல் நெடுநாள் வருந்தி உழைத்துத்தான் அறிவுபெறவேண்டும். அதற்கு வெகு நாள் செல்லும். அத்தனை நாளைக்கும் மன உழைப்பு உழைத்தால் தான் முடியும். மேசையும் நாற்காலியும் செய்யவேண்டியிருந்தால் எல்லோரும் அவற்றைச் செய்து முடித்துவிட முடியாது. தச்சனுடைய வேலை கற்றவஞல் தான் முடியும். துணி நெய்கிறதாஞலும், நகைகள் செய்கிறதாஞலும், அவ்வவ்வேலை கற்றவஞல் தான் கூடும். அவற்றைக் கற்பதற்கு மன உழைப்பு வேண்டியதாய் இருக்கிறது.

ஒருவரிடத்திலிருந்து வேலை கற்றுக்கொள்வது எளிது. ஒருவருக்கும் தெரியாத வேலையைப் புதிதாய்க் கண்டுபிடிப்பது மிகவும் அரிது. நீராவியந்திரம், மின்சாரசக்தி முதலியவைகளை முதலிற் செய்தவர்களும், நவீனமாய்க் கண்டுபிடித்தவர்களும் விசேஷமான மன உழைப்பு எடுத்து வெகு பாடுபட்டிருக்கவேண்டும். இதைப் போன்றதெல்லாம் மன உழைப்பென்று சொல்லப்படும். அரசாட்சி, உத்தியோகம், ஆசிரியத்துவம், பாவபுண்ணியங்களின் தெளிவு, தெய்வத்தியானம், மோக்ஷசாதனம் யாவும் மனே உழைப்பிலேயே அடங்கும். இந்த ஐந்துவகை உழைப்பின் மூலமாகத்தான் உலக சக்கரம் ஓயாது சுற்றிச் சுழன்றபடி இருக்கின்றது. இந்த ஐந்து வகை உழைப்பில் நீ உனக்குச் சொந்தமாகக் கொண்ட உழைப்பு எது? எந்த உழைப்பின் மூலம் உன் ஜீவியத்தை நடத்த எண்ணி யிருக்கிருய்? அதை முதலில் தீர்மானித்துக்கொள். நாலு காசாவது நீ வெளியிலிருந்து வீட்டிற்குக் கொண்டுவரவேண்டும். நாலு காசு தானே என்று அற்பமாய் நினைத்துவிட்டுச் சோம்பேரியாஞல், பின்னுக்குக் கிடைக்கக்கூடிய நாற்பது—நாநூறு—நாலாயிரம் ரூபாயையும் நீ இழந்தவஞவாய். முதலில் உன் கைக்குக் கிடைத்தது ஒரு சிறு துரும்பாஞலும் அதை விடாமல் பற்றிக்கொள். ஒருபோதும் உறங்கப் போகாதே. உறங்குவதற்கு உனது சமாதிப் பெட்டியில் வேண்டிய சாவகாசம் பின்னுக்கு இருக்கிறது. ஆகவே, இப்பொழுது உழைப்பதே உன்னுடைய வேலையாக இருக்கவேண்டும். உழைக்கத் தெரிந்தவன் பிழைக்கத் தெரிந்தவஞவான். அவனுக்குத் தான் விவாகமும் சீக்கிரம் நடக்கும்; அவனுக்கே வீடு வாசல்களும் சொத்துக்களும் உண்டாகும். கடவுள் ஆசீர்வதிப்பதும் அவனையே. ஆனதால் உழைப்பவனுக்கே தான் உயர்வு. உழைப்பவனுக்கே உன்னத பதவி. உழைப்பவனே உலகத்திற்கும் ஒவ்வொரு குடும்பத்திற்கும் தேவை.

---

எழுதும் மேஜைமேல் சிலர் ஏறி உட்காருகிருர்கள்; மேஜைமீது சரஸ்வதிதேவி சக்திதேவி விளங்குகிருர்கள். அங்கு குந்துவது கூடாது.



# ஹாஸ்ய சஞ்சீவினி



**தண்டச் சோற்றினர் கூட்டம் :—**

கோபு :—எங்கு வேலை யென்றால் D. P. W. வில் என்கிறாயே. பப்ளிக் வொர்க்ஸ் டிபார்ட்மெண்டிலா? என்ன சம்பளம்?

நாணு :—இல்லை. D. P. W. என்றால், D—தண்ட, P—பிண்டம், W—வொர்க்ஸ் என்று பொருள்படும். இது எங்கள் சங்கத்துச் சுருக்கெழுத்து. வீட்டுக்கு முக்கியமானவர்களை வசப்படுத்திக்கொண்டு, அவர்கள் தயவில் தண்டச் சோறு விழுங்கி, அவர்களுக்கு அந்தரங்கக் காரியதரிசிகளாய், குடும்பத்திலுள்ளவர்களின் மேல் புகார் சொல்லி அவர்களைச் சந்தோஷப்படுத்தி, ரகசியத்தில் கலகத்தையும் பிரிவினையையும் உண்டாக்குவது எங்கள் வேலை!

***

**பள்ளியில் வேலை :—**

பஞ்சு :—தங்கள் மாப்பிள்ளை எங்கு—என்ன வேலையிலிருக்கிறார்?
குஞ்சு :—பள்ளியில் 'பரி' வேலை.
பஞ்சு :—பள்ளியிலா? எத்தனையாவது வகுப்புக்கு உபாத்தியாயர்?
குஞ்சு :—பள்ளி என்றால் மடப்பள்ளியிலே. அங்கு 'பரிசாரக வேலை!

மாந்தை—சா. கிருஷ்ண ஐயர்.

***

**சரியான பதில் :—**

வீட்டு அம்மாள் :—ஏண்டி உன் உடம்பெல்லாம் வெளியே தெரிகிறதே. இப்படியெல்லாம் தெரியக்காட்டியா பிச்சை எடுக்க வேணும்?

பிச்சைக்காரி :—என்னைவிட உங்கள் உடை கழுத்து, மார்பில் பாதி எல்லாம் வெளியே தெரிய அலங்கோலமாயிருக்கிறதே. எல்லாம் இருக்கிற நீங்கள் செய்யும் பிசகுகள் நாகரீகம். இல்லாத நாங்கள் செய்வது மட்டும் கேவலமோ?

***

**புது மோஸ்தர் :—**

கேசவன் :—ஏது உன் உடை, நடை, தொனி யாவும் புது மோஸ்தராயிருக்கிறதே! எப்போது முதற்கொண்டு இப்படி?

வாசவன் :—உள்ளன்பினர் என்று நம்பி ஏமாறி விழித்துக்கொண்ட நாள்முதல் நான் எல்லாவற்றிலும் புது மோஸ்தராய்விட்டேன். உள்ளன்பற்று வெளிக்கு வெகு உருக்கமாய் எனக்கு எவரெவர் கடிதம் எழுதுகிறார்களோ, அவர்களுக்கு நானும் உள்ளன்பற்று, கடிதத்தில் மட்டும் வெகு பிரியமாய் எழுதி விட்டு நடிக்கிற புது மோஸ்தரையும் கற்றுக்கொண்டுவிட்டேன். இக்காலத்துக்கு இந்தப் புதுசரக்கு மோஸ்தர் எல்லாம் வேண்டியிருக்கிறதப்பா!

---

விசேஷித்த அநுபவமும் அறிவும் மிகுந்தவர்கள்தான் பலமுறை தவறித் தவறியும், பலரை நம்பி நம்பி மோசம் போயும் புது அநுபவமும் அறிவும் பெறுகின்றார்கள். நல்ல திட்டும் குட்டும் படுபவர் அவர்களே.




# ஏமாற்றுகிற சித்து வித்தை!



**பேஷ்!** அச்சா! நம்ம விகடன் எலுமிச்சம் பழத்திற்குப் புளிப்பை யேற்றுகிறதுபோல, பலே பக்கா ஏமாற்றுங் குட்டிகளாகிய நமக்கு இன்னும் ஒரு புது வழியான ஏமாற்றுச் சரக்கைக் கற்றுக் கொடுக்கப் புறப்பட்டிருக்கிறனே, அந்த வழியிலேயே போய் வீடு—மாடி—நிலம்—சொத்து எல்லாம் தேடிக்கொள்ள முடியுமா? அதற்குத்தான் விகடன் புது வழி, தந்திரச்சரக்கு ஏதாவது சொல்ல வந்தானே என்று என் விகடக் குட்டிக் குழந்தைகளில் வெகுபேர் வாயூறிநிற்கலாம். இந்த ஏமாற்றுகிற சரக்குத்தான் இப்பொழுது எங்கெங்கும் பரவிக் கும்மாளமிட்டுக் குதிக்கிறது! ஏமாற்றுவது பாபம் என்றுநினைக்கப்பட்ட குஞ்சு, குடிசைகள் எங்கேயாவது உண்டா? ஏமாற்றுதல் என்பதே ஒரு சாமர்த்தியச் சரக்காகவல்லவோ மாறிப் போயிருக்கிறது! எந்நேரமும் விழித்தபடியே கிடந்து, எதையும் பத்திரமாய் உள்ளே வைத்துப் பூட்டியபடியே யிருந்து, பெட்டியும் சாவியுமாகவல்லவா காத்துக் கிடக்க வேண்டி யிருக்கிறது! சற்று அப்படிக் கொஞ்சம் கண்ணயர்ந்தால், குளிக்கப்போன இடத்திலே துணியில் முடிந்திருந்த மூணு காசை அவிழ்த்து ஒரு பக்கம் வைத்துப் பிறகு அதை எடுக்க மறந்துவிட்டால் வந்தது மோசம்! பிறகு எவ்வளவு தேடினாலும் அகப்படாது! எடுத்தவர்களையும் கண்டுகொள்ள முடியாது. எவர்கள் எடுத்தவர்களென்று நினைக்கிறாமோ, அவர்கள்தான் அதை எடுத்ததாக எல்லாரும் எண்ணிக்கொள்வார்களென்று மற்றொரு கைக்காரப் பேர்வழிகள் அதை எடுத்து மறைத்து விட்டு, தாங்களும் யோக்கிய மனுஷர்களாக நடுவில் புகுந்து காணுமற் போனதைத் தேட நம்முடன் கூடிக் கொண்டு,—யார் எடுத்திருக்கலாம்— என்று நம்மையே கேட்டபடி பலே சொக்குபொடி தளுக்கு போடுகிறார்கள்! இது எப்படிப்பட்ட குட்டிக் கரண வித்தையடா அப்பா!

***

---

சில நாவல்கள் படிப்பதற்கு மிக்க ருசி. அதற்குள் முடிந்துவிட்டதே யென்றும் எண்ண வைத்து விடுகிறது. பல நாவல்களோ வழ வழ—சலிப்பு—தெவிட்டுதல்—வளர்ப்பு. இப்படியே சிலர் பேச்சிலும்—கடிதத்திலும் கூட!

கம்பளிமேலேயேசிலர்உட்கார்ந்து கொண்டு நகை, தாகு வியாபாரங்கள் நடத்துவதிலே ஏமாற்றுகிற பாவமெல்லாம் கம்பளியோடேயே போய்விடுமாம்! எத்தனை ஏமாற்றுத் தராசுகள்! எத்தனை மோசப்படிகள்! எத்தனை நயவஞ்சக வியாபாரங்கள்! எவ்வளவு குல்லாபோடுகிற சங்கதிகள்! குடும்பத்துக்குள்ளாகவே எவ்வளவு கோரணிகள்! மருமகளுக்கு எங்கே எல்லாம் சொந்தமாய்விடுகிறதோவென்று தன் மகன்பேருக்கு எழுதிவைத்த வீடு நிலம் முதலியவற்றை தர்ம சொத்தாக்கியும், தன் இளைய குமாரன் வகைகளில் மாற்றியும் எழுதிவைத்துவிடுகிற சங்கதிகள் எத்தனை! இன்னும் தன் கணவனை ஏமாற்றுகிற சித்திராங்கிகள் எத்தனை பேர்! தன் ஸகோதரர்களை ஏமாற்றுகிறவர்கள் எத்தனை பேர்! ஊரிலிருந்து வரும்போது வாங்கிவாவென்று எதற்காவது பணம் தந்தால் அதை விழுங்கிவிட்டு ஏமாற்றுகிறவர்கள் எவ்வளவு பேர்! மெதுவாக ஒட்டிக்கொண்டு தன் செலவுகளை இன்னொருவன் தலையில் கொஞ்சம் சுமத்திவிடுவதற்கு எண்ணமிடும் ஏமாற்றுத் தந்திரங்கள் எவ்வளவு! உருளைக்கிழங்கு இதுதான் கடைசிச் சாக்கு, பிடி, வீசை இரண்டணு, நாளைக்கு அகப்படாது என்று சொல்லி நாலு வீசைக் கிழங்கை நம் தலையில் ஏற்றிக் கடைக்காரன் அனுப்பிவிடுகிறுன். நாமும் வெகு நயமென்று நினைக்கிறோம். மறுநாள் பார்க்கப்போனலோ புது சாக்கு வந்து, கூட ஒரு தமுக்கும் வந்து, வீசை ஒன்றரை யணுவுக்கு மிதிபடுகிறது! ஒரு பெண்ணைக் கொடுத்தும், கொள்ளவும் போகிற இடத்திலே ஏமாற்றுச் சாக்குகள் எத்தனை! இரவல் நகைகள் போட்டு மினுக்கிக் கொண்டு அதைத் தங்களுடையது போலக் காட்டுகிற வித்தைகளெல்லாம் ஒருவகையான ஏமாற்றுச் சரக்குகளல்லவா? எல்லோருமே ஏமாற்றிப் பிழைக்கப் பார்க்கிறுர்களேயொழிய, மறந்து வைத்ததை எடுத்துக் கொடுத்து, உண்மைக்கு உண்மையாய் நின்று ஈசனுக்குப் பயந்து நடக்கிற அரிச்சந்திரக் குட்டி குஞ்சுகள் எதையும் காணேமே! ஐயோ ஆண்டவனே! படித்தபடிப்பெல்லாம், கற்றுக்கொண்ட கல்வி ஞானமெல்லாம் ஏமாற்றுப் பிழைப்புக்காகத் தானு? ஏமாற்றுகிற சித்தன் பொய் பழி பாவங்களுக்கு அஞ்சுவது ஏது? ஏமாற்றுவதிலே எவ்வளவு படுபாதகங்களைச் செய்கிறுர்கள்! இவ்வளவு செய்தும் அதை ஒரு சாமர்த்தியச் சாக்காகவல்லவோ ஊரார் புகழ மாற்றிவிடுகிறுர்கள்! இந்த அநியாயம் தெய்வத்துக்கு அடுக்குமா? எவள் கற்பு கெட்டு பத்தினிபோ விருந்து கணவனை ஏமாற்றுகிறுளோ அவளைத் தான் உலகம் மகா பதிவிரதையென்று சொல்லுகிறது! எவன் மோச வியாபாரங்கள் செய்து சொத்து சேர்த்தானே—அவனைத்தான் வெகு நாணயஸ்தனென்றும் நல்ல பணக்காரனென்றும் ஊரார் சொல்லித் துதிக்க ஆரம்பித்துவிடுகிறுர்கள்! திருடியோ, ஏமாற்றியோ, கொள்ளையிட்டோ பல பேர்களைக் குழி தோண்டிப் புதைத்தோ, கொலைகள் செய்தோ, கைம்பெண்களை அலறவைத்தோ, பல குடித்தனங்களைக் குட்டிச்சுவராக்கியோ எப்படியோ ஒருவன் மாடி வீடு கட்டிப் பாங்கியிலும் நிலத்திலும் கனத்த பணத்தைப் போட்டுவிடுகிறுன்! அவன் தேடிய பணத்துப்

---

சிலருக்குத் தங்கள் சொந்த இடத்திலன்றி வேற்று இடங்களில் நித்திரை பிடிக்கிறதில்லை; வேறு சிலர் எவ்வளவு அசதியாயிருந்தாலும் சரியே, இரவில் அதிகம் தூங்குவதில்லை. அந்த விழிப்பில் வேலையும் செய்கிறுர்கள்.

பெருமைக்கு முன்னே அதற்கு முந்தி செய்திருக்கிற அநியாயச் செயல்களெல்லாம் மறைக்கப்பட்டுப் போய் விடுகிறது! அந்த கர்ம சண்டாளனுக்குத்தான் பெரிய சபையிலே முதல் தாம்பூலம்! அவன் ஏமாற்றி வஞ்சித்ததெல்லாம் வெளிக்கு வருகிறதா? இதிலே அவன் செய்கிற தர்ம தானக் கூத்துகள் வேறே! உலகம் இப்படியாக ஏமாற்று வித்தையிலே பழுத்துத் தேறி நிற்கிறது பார்த்தீர்களா? இப்படி ஏமாற்றுகிற ஜெகஜண்டிகளெல்லாம் கடவுளை ஏமாற்றுகிறவர்களல்லவா? அவர் ஒருவர் உயர இருந்து—ஏன்?—தன் நெஞ்சுக்குள்ளேயே யிருந்து—தன்னைக் கவனித்து நிற்கிறார் என்பதைக் கொஞ்சமும் எண்ணாதவர்களல்லவா? இவர்களுக்கு ஆண்டவன் தக்க கூலி கொடுக்கிற நாளொன்றும் பின்னுக்கு இருக்கவே இருக்கிறதல்லவா? ஏமாற்றுகிற பிழைப்பு எத்தனை நாளைக்கு? கெட்டிக்காரன் புளுகு எட்டுநாளிலே தெரிந்துபோய்விடாதா?

* * *

விகடன் இந்தக் கசுமாலக் குப்பைகளையெல்லாம் சொல்ல வரவில்லை. இவைகளைக் கற்றுக்கொடுக்கவும் வரவில்லை. இந்த வழியிலேயே போய் ஒரு புதிய ஏமாற்று வித்தையைப் போதிக்கவும் வரவில்லை. விகடன் பேச முற்பட்ட கோணல் வழி இதல்ல! விகடன் சொல்லிக்கொடுக்க வந்த ஏமாற்றுகிற வழியின் சங்கதியே வேறு ஒரு மாதிரி! அதிலே பொய்ப் பாவங்கள் இல்லை. வஞ்சனை, மோசம், பித்தலாட்டங்கள் இல்லை. தெய்வத்துக்கு அஞ்சாமற் செய்கிற துடுக்குத்தனங்கள் இல்லை. சத்தியம், தர்மம், தானம், கற்பு, பக்தி, ஞானம் எல்லாமுமே அதில் நிறைந்து சந்தனம் புனுகு ஜவ்வாதுபோலப் பரிமள வாடைவீசி வெகு பசந்து தருகிறது. அதை என் ஊரார் கைக்கொண்டுவிட்டால் எவ்வளவோ ஆநந்தமாக இருக்கலாமே! நெஞ்சு எவ்வளவோ நிஷ்களங்கமாக இருக்குமே! இப்படிப்பட்ட ஞானப்பாதையிலே நடக்கிறவர்கள், நாளைக்கும் இருப்பதால்தான் மாதமும்மாரி தவறினாலும் நாலு புல் முளைக்க நாலு சொட்டு மழையாவது பெய்கிறது. எப்போதுமே சத்தியத்துக்கும் தர்மத்துக்கும் பழுதே கிடையாது என்று விகடன் ஆணையிட்டுச் சொல்லுவேன். கையில் ஒரு காசும் இல்லாத இந்த விகடன் பிழைப்பதுங் கூட, அந்த த்தியம், தர்மம், அன்பு என்பதைத் துணைக்கொண்டபடியாலே தான்! கடவுளை மனஸ்பூர்த்தியாய் என்றைக்கும் நம்பியபடியாலேதான்!

* * *

விகடன் என்னிலே பட்டுண்டதையே ஊருக்கும் அளக்கிறேன். அப்படி என்னடா விகடன் புது வழியாகச் சொல்ல வந்தது என்பீர்களோ? "ஏமாற்றுதல்"—என்கிற பதமே கேடுகெட்ட சொல்லாச்சே. இந்த ஏமாற்றுகிற வழியிலே தர்மமும் சத்தியமும் எங்கடா இருந்துவந்து முளைத்தது என்று விகடனை நீங்களே திருப்பிப்போட்டு வறுக்கவும் பார்க்கலாம்! கெட்ட பதத்திலும், கெட்ட சரக்கிலும், கெடுவழியிலும், நாறுகிற சங்கதியிலும் நல்ல ஞானத்தை எட்டிப் பிடித்துக்கொள்ளுகிற சங்கதியை இதோ விகடன் அவிழ்த்துக் கொட்ட ஆரம்பிக்கிறேன் கேளுங்கள்!

---

தனக்குப் பெண் கொடுத்தவர்கள் செய்கிற வியாபாரத்தில் தான் ஒரு கூட்டாளியாய் இருப்பதைவிட, தான் செய்யும் வர்த்தகத்தில் அவர்களைத் தன் கீழ் இருக்கவைப்பதே தனக்குக் கௌரவம்—தன்மதிப்பு,

அழகு பெண்ணே! ஆரணங்கே! என் அருமை மகளே! பாவாய்! விகடன் உனக்கு ஏமாற்றுகிற வழியொன்றைக் கற்றுக்கொடுக்கிறேன். பத்திரமாய் அதை முடிச்சுபோட்டு வைத்துக்கொள்ளு! உன்னைக் கெடுக்க வருகிற பொல்லாத ஆசைகளுக்கெல்லாம் நாளைக் கடத்திக்கொண்டே போய் மெதுவாக அவற்றை ஏமாற்றிவிடு! வேறு எவர் மீதாகிலும் சிந்தை தடுமாறினல் அந்தத் தடுமாற்றத்தை மெதுவாக உன் வீட்டு வாயிலே விட்டுக் கடத்தி ஏமாற்றிவிடு. மூர்க்கப் பிசாசுகளும், வஞ்சனை—லோபம்—கருமித்தனம்—பேதபுத்தி—முதலிய பிசாசுகளும் உன்னை மெதுவாகப் பிடித்துக்கொள்ள வரும்; அவற்றையும் நீ தந்திரமாய் ஏமாற்றித் தப்பித்துக்கொண்டுவிடு! நீ எத்தனை தான் அழகியானலும், உன் தேகநிலை ஒரு அசங்கியத் தோற்றமே யாதலால் அந்த உள்ரகசியம் வெளிவாாதபடி கந்தையானலும் கசக்கிக்கட்டி, கூழானலும் குளித்துக் குடித்து நல்ல மஞ்சள் பூசி மினுக்கி உன் கணவனின் நெஞ்சிலே உன்னைப்பற்றி ஒரு அசங்கிய எண்ணம்—அதிருப்தி தோற்ருதபடி செய்து, அவன் உன்னையே பரிமள வஸ்துவாக நினைத்துக்கொள்ளும்படி உன் மேலாடைகளை யெல்லாம் நன்ருக முடிக்கொண்டு மயக்கி அவனை ஏமாற்றிவிடு. மூடியிருப்பதற்கே அதிக மதிப்பு. உன் மானம் அறிந்த கணவனேயானலும், அவன் முன்னும் அவன் மனதில் ஒரு அசங்கிய நினைவு படாதபடி, அவன் புத்தி கெடாதபடி உன் மேலாடையை ஒழுங்குபடவைப்பதே அவனை ஏமாற்றித் திருத்தும் ஞானவழி. அவன் சிந்தை காமத்தின் பாதையில் பாயாதபடி அவனை ஏமாற்றவும் மேலாடையை மூடுவது ஒரு தந்திரம். இன்னெரு ஏமாற்று வித்தையைக் கேட்கிருயா? உலகத்திலே ஆடவர் வர்க்கம் எப்பொழுதும் சலனப்பட்டுக்கொண்டிருப்பதே வழக்கம். அன்னிய மாதரிடத்துச் சிந்தை செல்வதே அதிகம். அவ்விதம் உன் கணவஞர் மயங்கிவிடாதபடி நீயே அந்த அந்நிய ஸ்திரீ போலவும் அதிகமான சிங்காரிப்பில் நின்று அவரைக் களிப்பித்து அந்த வகையில் அவர் கெட்ட பாதைக்குச் செல்லாதபடி ஏமாற்றிவிடு. இன்னும் துவேஷப்பட நினைக்கிற உன் மாமியையும் உன் தாழ்ந்த பணிவிடைகளால் ஏமாற்றிவிடு. குடும்பத்தைப் பிரிக்க நினைக்கிறவர்களையும் ஏமாற்றிவிடு. கலகத்துக்கு வழி வைக்கிறவர்களையும் அவ்விதம் நேரிடாதபடி செய்து ஏமாற்றிவிடு. வாவுக்கு மிஞ்சி நேரிடுகிற செலவினங்களையும் எச்சரிக்கையுடன் கவனித்து, வட்டிக்குக் கடன்தா உன்னிடம் வந்தவர்களின் ஆசை நிறைவேருதபடி ஏமாற்றிவிடு. இவ்விதமே நெடுக உன் வாழ்க்கை முழுதும் உன்னைச் சூழ வருகிற தகாத செயல்களை யெல்லாம்—சோதனைகளையெல்லாம் ஏமாற்றிவிட்டுத் தப்பித்துப் போய்விடு.

***

இவ்விதமே ஆண்மக்களும் தங்களை மயக்குகிற பொல்லாத சோதனைகளையெல்லாம் அவைகளை ஏமாறிப் போகும்படி செய்துவிடவேண்டும். தங்கள் புத்தியைக் கலக்கவருகிற பேச்சுக்காரர்களையும் வெட்கி ஏமாறிப் போகவைத்து விடவேண்டும். சன்மார்க்கத்தினுடைய பாதையினின்றும் மெதுவாக விலக்கிவிடப் பார்ப்போரையும் ஏமாற்றிவிடவேண்டும். மித்திரர்கள்போல் நெருங்குகிற அநுகூல சத்துருக்களையும் மெதுவாக ஒதுக்கி

---

ஒரு தடவைக்கு நாலு தடவை நல்லது சொல்லியும் கேட்காதவனை அவன் போகிற வழியிலேயே போகவிட்டுத் தான் கடைசியில் திருத்தவேண்டும்.

ஏமாற்றிவிட வேண்டும். விருதா கோஷ்டியாக நமது காலத்தைவீணுக்க வெறும் பேச்சைப் பேச வருவோரை யும் அவர்களுக்கு அதிக இடம் தாரா மல் ஏமாற்றிவிடவேண்டும். கோள் சொல்ல வருவோருக்கும் ஒரு தலை யசைப்பு அசைத்து அவர்கள் கூறி யதை ஒரு செவியில் கேட்டு மற்றொரு செவி வழியாய்ப் போகவிட்டுக் கம் மென்று இருந்துவிட்டால், அவர்க ளும் நமது கோள்மூட்டுதல் இவனி டம் பலிக்காது என்று தெரிந்து ஏமாறிப் போவார்கள். இவ்விதமே நெடுக இந்த ஞானப் பாதையிலேயே நடந்து பொல்லாதவற்றை யெல்லாம் ஏமாற்றிவிட்டுத் தன்னைச் சத்தியத் தின் வழியிலே வைத்துக் காத்துக் கொள்ளப் பார்க்கவேண்டும்.

***

இவ்விதமே மாணுக்கன் தன்னை மூடன் என்று கருதிய ஆசிரியரைத் தனது முயற்சியால் பரீக்ஷைகளில் தேறி ஏமாற்றிவிடலாம். தன்னை வேலை செய்யாத சோம்பேறி என்று நினைக்கிற எஜமானனையும் வேலையாள் தனது உழைப்பின்மூலமாக ஏமாற்றி விடலாம். அவனு—முன்னுக்கு வருவ தேது—என்று பழிப்போரையும் நமது ஊக்கத்தால் உயர்நிலையுற்று ஏமாற்றிவிடலாம். என்றும் நம்மை ஏழ்மையிலேயே இருத்த நினைக்கிற ஊழ்வினையையும் ஏமாற்றிவிடலாம். தவறிக் கேடான சிந்தனைகட்கும் செயலுக்கும் உட்பட இருந்த வேளை யையும் நமது விவேகத்தால் வென்று ஏமாற்றிவிடலாம். வழக்காடவேண்டி வருகிற விஷயங்களையும் விட்டுக் கொடுத்து அவ்விதம் நேராதபடி செய்து, அதில் நடுவிலே பறித்து லாப மடைய நினைத்தவர்களையும் ஏமாற்றி விடலாம். நம்மைக் கோபப்படும்படி உசுப்பேற்றிவிடுகிற சண்டாளர்களை யும் நாம் சாந்தமாயிருந்து ஏமாற்றி விடலாம். நம்மையே ஏமாற்ற வந் தோரையும் விழித்தபடியே இருந்து ஏமாற்றிவிடலாம். நமது கஷ்டத்துக் குத்தக்கபடி கூலிதராமல் அதிகமான உழைப்பை மட்டும் பெறுகிற எஜ மானனையும் இன்னும் அதிகச் சம்ப ளம் தருகிற இடத்தை எட்டிப் பிடித் துக்கொண்டு ஏமாற்றிவிடலாம்.

***

நமது மனத்தைக் கலங்க வைத் திடுவதற்காக வரும் சோதனைகளையும் சகித்து ஜீரணித்துக்கொண்டு மனங் கலங்காதபடியே நின்று ஏமாற்றிவிட லாம். மண், பொன், பெண் மூன்று லும் மயக்குற வைக்கும் உலகமாய்கை யையும்—அவற்றில் புளியம்பழமும் ஓடும்போல் ஒட்டாமலொட்டியிருந்து ஏமாற்றிவிடலாம். இப்படியே இந்த விகடன் நெடுகச் சொல்லிக் காட்ட லாம். இப்படி ஏமாற்றிவிட்டு இறைவ னின் பக்கத்தில் அமரப்பார்ப்பது ஒரு மேலான ஞானவழியல்லவா? சத்தி யத்தின் பாதையிலே, தர்மநெறியிலே, கற்பு லக்ஷண வழியிலே கருத்தூன்றிக் கொண்டு அதற்கெதிரிடையாக மயக்க வருவனவற்றையெல்லாம் ஏமாறவைத் துத்தாத்திவிடுவது எவ்வளவு சாமர்த் தியமான செய்கை? எத்துணைத் திற மையான பக்குவப் பயிற்சி? ஆகவே, இந்த மேலான ஏமாற்றுகிற சித்து வித்தையை எனது விகடக் குஞ்சுக் குழந்தைகள் கற்றுக்கொள்ளவேண்டு மென்று சொல்வதற்கே இவ்வளவு விரிவுக்கு என் வாயைத் திறந்து கொண்டேன். இவ்விதம் நடக்க உங்களால் ஆரம்பத்தில்தானே ஆகா விட்டாலும் இதிலுள்ள ஞானத்தை யாவது கிரகிக்கப் பாருங்கள். ராம்! ராம்! சுபம்! சூ! சுவாஹா!!

---

மனம் விரும்பாத மணவாளனை மணக்கநேர்ந்ததே யென்னும் ஏக்கத்தி னுலேயே ஒரு பெண்மணி ஆயுள் சுருங்கி மாண்டனளாம். பரிதாபம்!




மானிட வாழ்க்கையைப்பற்றி ஒருவர் கேட்டதற்கு விகடன்—10-ல் பயிற்சி, 20-ல் இரதி சிந்தனை, 30-ல் முடிவுகண்ட ஒரு கலை அளவு நிலை, 40-ல் திரவிய சேகர நாட்டம், 50-ல் அலுத்துவிடுகை, 60-ல் நீங்காத பிணியில் அழுகுதல், 70-ல் எல்லாமுமே சோர்வு, 80-90-100-ல் பிறருக்குச் சுமை, எவரிடமும் எச்சு, சாரமற்ற வாழ்க்கை, கண்ணிழந்த கபோதி, மண்ணோடு மண்ணுதல்,—இவ்வளவும் நூறுவயதுவரை காலை 'நீட்ட முடிந்தால்,—என்று பதில் சொன்னனும்!

***

"முப்பதாம் ஆண்டளவில்" என்ற பாட்டின் முடிவான "மூலையளவே யாதுமாம் மூப்பு" என்பதைக் குழந்தைகளின் வகுப்பில் எப்படி விவரித்துப் பொருள் சொல்வது என்றதற்கு விகடன், அதை யௌவனக் காளைகள் நிறைந்துள்ள வகுப்புக்கு மாற்றி அருத்தம் கூறினல், உபாத்தியாயர் சொல்வதற்கு முன்னதாகவே அவர்கள் தெரிந்துகொள்வார்கள் என்று விடை பகர்ந்தானும்!

***

வீட்டில் சமாதானம் நிலைப்பதற்கு இரண்டு கோட்சொல்விகளும், நாலு துவேஷக் கொள்ளிகளும், மூன்று தூண்டிவிடும் சுள்ளிகளும், அடங்காத சில கள்ளிகளும் கூடி இருந்தால் போதுமானதென்று தெரு சிரிக்கும் காண்டம் கூறுகிறதாம்!

'கோழைப்பு' என்பது பிராணிகள் வயிற்றில் மட்டுமல்ல, புருஷன் வீட்டில் வாழும் பூவையர்க்குத் தாய் வீட்டைச் சேர்ந்தவர்கள் மூலமும், ஒரு வேலையுமில்லாதவர்களுக்கு அவர்களை ஊட்டி வளர்ப்பவர்கள் மூலமும் கொழுப்பு உண்டாகிமுற்றி 'முறுக்கித் திமிர் பிடிக்கலாமென்றும் விகட பதார்த்த குண சிந்தாமணி விவரிக்கிறதாம்!

***

வீட்டிற்கு வந்த புருஷ ஆண்டிகள் தெருத்திண்ணையிலே குந்தியிருப்பதை விட்டு, சமையற்கட்டுக்குள் சாடையாய் நுழைகிறதென்ன, அங்குள்ளவர்களை நோட்டமிடவா?—என்று விகடசித்தாண்டி வினவுகிறார்!

***

எஜமானனை ஏமாற்றி அவன் தொழிற்சாலையை இன்னொருவனிடம் தாகுபெற்று நயமான விலையில் சேர்த்துக் கூட்டிவிடுபவனுக்கு, அந்த இன்னொருவனும் வெகு சீக்கிரமே பட்டை நாமம் சாத்தி வேறிடத்தில் வேலைக்கு அலையப் பறக்கவிடுவானென்று படுமோசபுராணம் பகர்கிறதாம்!

***

நெருங்கி அதிகம் சேர்ந்திருப்பதிலே அன்புகூடிப் பொங்குவதும் ஒரு காலம்; அலக்ஷியமும் வெறுப்பும் புகைந்து மூண்டெறிவதும் ஒருகாலம் என்று காலதேவதை விகடனுக்குக் கூறிற்றும்!

***

அடித்தவன் தன் சாதியானயின், அடித்தது எவ்வளவு அக்கிரமமாயிருப்பினும், அவன் பக்கத்தாருக்கு அது நியாயமாகவே பட்டு, அவனோடேயே சேர்ந்துகொண்டு, அடிபட்டவனுக்கு அப்படித்தான் வேண்டுமென்று பேசச் செய்யுமென்பதாக "ஜாதியபிமானம்" சாற்றுகிறதாம்!

---

கோபம் கொதித்துப் பேசுகிறவனுக்கு தாகசாந்திசெய்வித்தால்—சாப்பிடச் செய்தால்—அவனைக் கௌரவமாய் நினைக்கும் ஒருவர் அச்சமயம் வந்துவிட்டால்-அவனும் மௌனமாகிக் கோபமும் தணியுமென்பது ஒரு அநுபவம்.

எக்காலக் கண்ணிகள்.

7. குறித்த கள்வர் சார்பாகிக்
கூறும் வழிப்போக்கர்களைப்
பறித்தடித்து வந்து
பணம் சேர்ப்ப தெக்காலம்?

8. ஆதிக் கடவுளுக்கும்
அஞ்சாமல் மிஞ்சுபஞ்ச
பாதகமும் பண்ணிப்
பணஞ் சேர்ப்ப தெக்காலம்?

9. உயிர்க்கிறுதி நேரினுங்கை
யோங்குபொருள் சேர்க்குமே [னில்
பயப்படாதே செய்து
பணஞ் சேர்ப்ப தெக்காலம்?

10. ஆக்கு முதல் மீட்டி மீட்டா
அருஞ்சமீன் வாழ்வை வட்டிப்
பாக்கிக்கே யேலமிட்டுப்
பணஞ் சேர்ப்ப தெக்காலம்?

11. ஜீவனையே ஈயவந்த
சிநேகனுக்கு மில்லையென்று
பாவனையே காட்டிப்
பணஞ் சேர்ப்ப தெக்காலம்?

இப்படிச் சேர்க்கும்
பணம் விடியுமா?

## பெண்மணிகளிடத்துள்ள ஓர் அபூர்வ குணம்.

எவ்வளவு வயதேறிய பெண்களானுலும், விருத்தாப்பியமே கொண்டுவிட்டாலுங்கூட அவர்களிடம் ஓர் அபூர்வ குணம் உளது. எவ்வளவு வயதிலுங்கூட சின்னஞ் சிறு பெண்கள் போல் விளையாட்டிலேயே வெகு பிரியம் கொள்ளுகிறார்கள். விளையாட மேன்மேலும் ஆவல் துள்ளுள்கிறார்கள். கொம்மி யடிக்கிறார்கள். பரிகாசம் செய்கிறார்கள். தங்கள் குழந்தைகளோடு கூடிக்கொண்டு அவர்களின் பொம்மைக்குப் பாவாடை ரவிக்கை யெல்லாம் கட்டி சிங்காரித்து அவர்களோடு இவர்களும் சேர்ந்துகொண்டு சிறுமிகளாய் விளையாடுகிறார்கள், ஒரு நிமிஷத்தில் தெய்வீகக் குழந்தை யுருவாய் மாறித் தங்கள் குழந்தைகளின் விளையாட்டுத் தோழிகளாகி அவர்களைத் திருப்தி செய்கிறார்கள். இந்தக் குணம் சிடுசிடுத்து உர்ரென்று உறுமி வருகிற ஆடவர்களிடம் உண்டா?

---

*அவன் மூட்டை மூட்டையாகக் கட்டிவந்தானே யென்று இவனும் பொருள் தேடக் கப்பலேறுகிறான். இவன் அதிர்ஷ்டமோ கைப்பொருளும் போய்த் திரும்பிவருகிறான்!*

*வெளிநாடு சென்று வந்து பொருள் குவித்தவர்கள் தங்கள் சொந்த ஊரில் சீக்கிரம் அதைக் கரைத்துவிட்டு மறுபடியும் ஏழைகளாய் ஒரு தொழிலில் அமரப் பார்க்கிறார்கள். சில மாடிமேல் மாடி கட்டுவதுமுண்டு.*

# தலைவி பிரிவாற்றுமை.



பழைய காலத்திலே நம் ஆன்றோர்கள் கோலிவைத்த * எண்வகை மணங்களுள் 'கந்தருவம்' என்பது ஒன்று. இது "யாழோர் கூட்டம்" என்றுங் கூறப்படும். இஃதொன்றே மற்றையேழினும் மிகமிகச் சிறந்தது என நம் தமிழ்ப் பெரியோர்கள் பலவாற்றானும் விரித்துக் கூறியிருக்கிறார்கள். அது குறித்து இங்கே விரித்தெழுத இடமல்ல; சமயமுமல்ல. எனினும், அதைப் பற்றி ஒரு சிறிதும் அறியாதவர்க்குச் சில வரைகின்றேன். பொதுவாக இத் திருமணம் நடைபெறுதற்கு ஏதுவாக இருப்பது மலையும், மலைசார்ந்த இடமுமே யாகும். மலைச்சாரலிலே வரகு, தினை, சாமை முதலிய பயிர்கள் ஓங்கி வளர்ந்து கதிர்கள் முற்றும் சமயத்து கிளி முதலிய பறவைகள் அக்கதிர்களைக் கொத்தித் தின்ன வரும். ஆதலின், அப்புட்களையோட்டிக் கதிர்களைக் காப்பதற்கு எவ்வளவு பெரிய செல்வவந்தர் வீடாயினும், அவ்வீட்டின் மணமாகாத இளம்பெண்கள் தம் தோழிகளோடு காடு சென்று கதிர்களைக்காப்பது வழக்கம். அங்ஙனம் காத்து நிற்கும் பொழுது சிலவேளை குன்றுகளில் ஏறி ஆங்குள்ள மலர்ச்சுனைகளில் குளித்து விளையாடி, குவளை முதலிய மலர் பறித்து மாலையாகத் தொடுத்து ஒருவருக்கொருவர் அணிந்து அழகு பார்த்தும்; குயிலோடு எதிர் கூவியும்; கைதட்டி ஒடியும்; கண்புதைத்து மறைந்தும் விளையாடிப் பொழுது போக்குவர். இவ்வாறு விளையாடும் பொழுது தோழிகளும் தலைவியும் தனித்தனியே பிரிந்து நிற்க நேரிடும். வேட்டையாடும் பொருட்டு காட்டகத்தே வந்த மணமாகாத ஓர் செல்வக்குமரன் தனது துணைவர்களைவிடுத்து நீர் வேட்கையாலோ வேறெக்காரணத்தினாலோ பிரிந்தவன் ஊழ்வினைகூட்ட அக்கானகத்தேயுள்ள சோலையில் முன்பு தனியே பிரிந்து நின்ற தலைவியைச் சந்திப்பான். பின்னர் இருவர் மனமும் ஒன்றுபட்டு அங்கேயே கூடி யின்பமனுபவிப்பர்.

இங்ஙனம் பலநாள் கூடி மகிழ்கையில் கதிர்கள் முற்றி அறுப்பிற்கு வந்து விடும். அன்று தொட்டு தலைவியும் பிறரும் புனங்காவல் ஒழிந்து இல்லஞ் சேர்வர். இனி யத்தலைவனும் தலைவியும் முன்போல் கூடிமகிழ இயலாது. எனவே, இருவரும் தனித்தனியே வருந்தி நிற்கையில் தலைவியின் பெற்றோர் தம்மகட்கு மணம் பேசி நிற்பர். மகள் தன் காதலனை மனத்துட்கொண்டு பெற்றோர் குறிக்கும் வேறெவரையும் மறுத்துவிடுவாள். இவ்விதம் சில நாள் செல்ல, பெற்றோர் ஒருவாறு உண்மையறிந்து அவள் காதலித்த அவனுக்கே அவளை மணமுடித்து வைப்பர். பின்னர் தலைவனும் தலைவியும் இல்லறம் நடாத்தி இன்பந்திளைக்கையில், தலைவன் பொருள் தேடவோ, வேறு தொழில் நிமித்தமோ பிரிய நேரிடும். இங்ஙனம் பிரிந்த தலைமகன் பல நாள் சென்றும் வாராமையால், அவன் குறித்துச் சென்ற நாளும் நெருங்கியது கண்ட தலைமகள் மனம் சகியாது, கடற்கரை சேர்ந்து, "தன் காதலன் விரைவில் வருவனோ? அல்லனோ?" என்பதையறிய இருகண்களையும் மூடி மணலில்

---

* பிரமம், பிரஜாபத்யம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என மணங்கள் எட்டு வகை.

வளையம்போல் வட்டமாகக் கோடு கிழித்துப் பார்ப்பள். சுழித்த கோடு இரு முனையும் சேர்ந்திருப்பின் தன் காதலன் விரைவில் வருவன் எனக்கருதி மகிழ்வள். இல்லையெனின் பெருமூச்செறிந்து கண்களில் முத்து முத்தாய் நீர்துளிப்ப வருந்தி, வட்டத்தின் இருமுனையும் சேரும் வரை சுழிப்பதும், அழிப்பதுமாகவே யிருப்பாள். இவ்விதம் சுழிப்பதும், இருமுனையும் ஒன்ருகப் பொருந்தாதது கண்டு அழிப்பதும், பின்னர் சுழிப்பதுமாக வருந்திக் கையும் மனமும் ஓய்ந்த தலைவி அருகே உப்பங்கழிகளில் மேயும் நாரைகளைப் பார்த்துக் கூறுகின்ருள்.—

"வழிமேல் மனமும் மனமேல் மயலும் வளைந்தமணற்
சுழிமேல் விரலும் விரல்மேல் துளியும் என் சோகமெல்லாம்
கழிமேல் இருக்கும் குருகினங்காள்! சென்ற காதலற்குப்
பழிமேற் சுமக்கு மேன்றேசொல்லுவீர் இந்த பாவியேற்கே."

தலைவியிங்ஙனமாக, பிரிந்த தலைவனே தான் சென்ற தொழில்மேலே யேமுழுதும் நோக்கமுடையவனுக இருந்து, அத்தொழில் முற்றும் சமயம் தன் காதலியின் நினைவு வர; அன்று அவளைப் பிரியும்பொழுது, அவள் காட்டிய கரையற்ற காதலை நினைந்து நெஞ்சுருகிப் பாடுகிறுன்.—

"என்று திரும்பி வருவீர்? எனவினவிக் குழைந்து
கன்றிய நெஞ்சோடு கண்ணீர் உகுத்து வெண்ணீறு தந்து
குன்று நிகர்கொங்கை மீதேயணைத்துக் கொடுத்த விடை
ஒன்றை நினைந்தல்லவோ என்றன் ஆகம் உருகுவதே."

மறுநாளே தலைவன் தலைவியை யடைந்து ஒப்பற்ற காதலொடு ஒன்றி வாழ்வன்.

பெ. இராமாநுஜ ரேட்டியார்.

## எழுந்திருக்கிறவர் சும்மா போகக்கூடாதா?

ஒருவர் ஒரு காரியமாய் ஒரு மனுஷ்யரிடம் போய் அவரால் ஒரு வேலையை முடிப்பித்துக்கொண்டிருக்கையில், அந்த சமயம் இன்னெருவர் வந்து குந்திவிடுகிருர். நடந்து கொண்டிருந்த வேலையும் இடையில் நின்றுவிடுகிறது. வந்தவர் நெடுநேரம் பேசிவிட்டு, எழுந்திருக்கும்பொழுது அந்த மனுஷ்யரையும் தன்னுடன் இட்டுக்கொண்டு போய்விடுகிருர். அவருடன் போன மனுஷ்யர் திரும்பிவருகிற வரையும் வந்து சென்றவர்மீது எரிச்சலுடன் காத்திருக்க வேண்டியதாகிறது! காரியமும் முடியாமல் பாதியில் கிடக்கிறது!

---

முடியாத காரியமானுல்—தீராத வியாதியானுல்—அக்கிரமத்தினுல் அவதியானுல்—அப்போது "கடவுள் இருக்கிருர், காப்பாற்றுவார்" என்கிருன்!




## 2. அற்ப குணம்.

(18-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 127. அடுக்குகிற அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியுமா?

அற்பகுணமுள்ளவர்களுக்கு சந்தர்ப்பம் அசந்தர்ப்பம் என்பது தெரிவதே இல்லை. இன்னகாலத்தில் இன்னவாறு நடக்க வேண்டுமென்ற ஞானமே அவர்களுக்கு இல்லை. தங்களின் அற்ப புத்தியில் தாங்கள் செய்வதே சரியான காரியமென்று எண்ணிவிடுகிறார்கள். தங்கள் ஞாயம் தங்களுக்குச் சரியாக இருந்தால் போது மென்பது அவர்களின் பிடிவாத சித்தாந்தம். தாங்கள் அற்பகுணத்தால் விளைவிக்கும் தீமையை ஒரு நாளும் தெரிந்து கொள்வதேயில்லை. தெரியக்கூடிய அந்தப் பெரிய புத்தியே தோன்றுவதில்லை. வீட்டுக்குத் தலைமையா யுள்ளவர்கள் வெளியூர்களுக்கு முக்கிய வேலையாகச் சென்றிருக்கும்போது புத்திசாலியாயுள்ளவர்கள் வீட்டுத்தலைவன் வருமளவும் எவ்வித கலகம் சச்சரவுகள் நேராமலும், வீட்டைப்பற்றிய கவலையே வெளியூரிலிருக்கிற குடும்பத்தலைவனுக்கு உண்டாகாதவாறும் ஜாக்கிரதையாய்க் காத்துக் கொண்டு போவார்கள். வலிய கலகங்கள் உண்டாக நேர்ந்தாலும் கூடியவரை அது நேராவாறும், நேர்ந்தாலும் அது வளர்ந்து பிரமாதப்படாதவாறும் தடுத்து விடப் பார்ப்பார்கள். அப்படி கலகம் முதலியன சம்பவித்தாலும் வெளியூரில் இருக்கிற குடும்பத்தலைவனுக்கு அவற்றைத் தெரிவிக்காமல் மறைத்து அவன் மனோவமைதி கெடாதிருக்க விஷயத்தை மூடி விடுவார்கள். இது புத்திசாலிகளின் சங்கதி. அற்ப புத்தியுள்ளவர்களோ வீட்டுத்தலைவன் ஊருக்குச் செல்லுகையில் எவ்வளவோ சிரமத்துடன் காப்பாற்றிவைத்துப் போகும் குடும்ப சமாதான நிலையை ஒரு அற்ப சங்கதிக்குப் பாழ்படுத்திக் கலகமும் குழப்பமும் எச்சும் பேச்சுமாக்கி விடுகிறார்கள். எவ்வளவுக்கு வார்த்தைகளை வாரி வீசமுடியுமோ அவ்வளவுக்கும் வீசி எதிர்த்துக் கொள்கிறார்கள். வீடு ரணக்களமாகிறது. இதில் இருபக்கத்தாரும் வீட்டுக்கலகங்களை வெளியூரில் இருக்கிறவனுக்கு விஸ்தாரமாய் அர்ஜெண்ட் (Urgent) தபாலாக அனுப்புகிறார்கள். வெளியூரில் பல கவலைகளோடும் அல்லாடிக் கொண்டு கிடக்கும் மனுஷ்யன் இந்தக்கடிதங்களைப் படிக்கும்பொழுது சித்தம் குழம்பித்தவித்துப் போய்விடுகிறான். உடனே புறப்படலாமாவென்று நினைக்கிறான். புறப்பட்டு விட்டால் எதற்காகப்பணத்தை வாரிஇறைத்துக்கொண்டு வந்தானோ அத்தனை வேலைகளும் கெட்டுவிடுகிறது. கலகக் குழப்பத்தில் சம்பந்தப்பட்ட இருபக்கத்தாரும் ஒருவர் மீதொருவர் எத்தனையோ புகார்களைச் சொல்லி எழுதுகிறார்கள். இனி அண்டை அயலில் இருப்பவர்களும் வேறே எழுதுகிறார்கள்.

---

வீட்டுத்தலைவன் கோபித்துக்கொண்டு நாலாவது வீட்டில் போய் உட்கார்ந்துகொண்டாலென்ன? அவன் பட்டினியுடன் காய்ந்திட, வீட்டிலுள்ளவர்களோ நன்றாகப் புசித்துக் கொழுத்து ஏப்பமிட்டு விடுகிறார்கள்!

ஒவ்வொரு கடிதமும் ஒவ்வொரு விதமாக இருக்கின்றது. ஒவ்வொருவரும் தங்கள் குற்றத்தையும், தாங்கள் வாய்த்துடுக்காகப் பேசியவற்றையும் விட்டு விட்டு மற்றவர்கள் சொல்லியதை மட்டும் பெருக்கி எழுதுகிறார்கள். இவ்விதம் எழுதி வெளியூரில் அவன் அருமையாய் அடுக்கிக் கொண்டிருக்கிற பல காரியங்களையும் இவர்கள் உடைத்தெறிந்து தாறுமாறு ஆக்குகிறார்கள். அவனோ அதற்கு, தான் வருமளவும் சாந்தமாய்ப் பொறுத்துக் கொள்ளும்படி பதில் எழுதித் தபாலுக்கு அனுப்பிய மறுநாளே இன்னும் விபரீதமாகக் கடிதங்கள் வருகின்றன. அதைப் பார்த்ததும் எந்த வேலையிலுமே புத்தி செல்லாமல் புறப்படவும் கூடாமல் தத்தளிக்கிறான். இவ்விதம் வெளியூரில் இருப்பவனுக்குத் தெரிவித்து அவனைக் கொந்தளிக்கச் செய்து அவன் வேலைகளையும் கெடுப்பதில் வரும் பயன் என்ன? அவன் திரும்பி ஊர் வந்து சுகமாய்ச் சேரும்வரையில் இவ்விஷயங்களை மூடிவிட்டு குடும்ப க்ஷேமத்தைப்பற்றி மட்டும் தெரிவித்து வந்தால் எவ்வளவு உத்தமமாயிருக்கும்? இன்னும் குடும்பத்தலைவன் வெளியூரில் உள்ள சமயத்தில் கலகமில்லாமல் சமாதானத்துடன் சமரஸமாய்நடந்து கொண்டால் அது வெளியூரில் இருப்பவனுக்கு எவ்வளவோ உதவி செய்தது போலாகுமல்லவா? இதைவிட்டுக் குடும்பசமாதானத்தைப் பாழ்பட வைப்பதில் குடும்பத்திலுள்ள பெண்கள்தானாகட்டும், ஆடவர்கள்தானாகட்டும் வாரிக்கொள்ளும் லாபமென்ன?




பெற்றுக்கொள்ளும் கீர்த்திப் பிரதாப கெம்பீரம் என்ன? சமாதானத்தை எவ்வளவோ சிரமத்துடன் அவன் அடுக்கிவிட்டுப் போக, அவன் திரும்பி வருவதற்குள் அந்த சமாதானத்தை உடைத்துச் சின்னாபின்னமாக்கிக் கலகம் செய்வது பெரிய புத்தியாகுமா? இது அல்ப சிந்தையால் ஆலோசியாத தன்மையல்லவா? இன்னும் இதை வெளியூரில் இருப்பவனுக்குக் தெரிவிப்பதில் அவன் எவ்வளவு வருத்தப்படுவான் என்று யோசிக்க வேண்டாமா? அவன் வீடுவந்த பிறகு எல்லாம் கேட்டு வருத்தப்படச் செய்கிறதுதானே? அதுவரையில் அவனைச் சமாதானமாயிருக்கும்படி விட்டு விடுகிறதுதானே? ஒரு குயவன் எவ்வளவோ சிரமப்பட்

---

உயிர் பிரியும் நிலையிலேயே தன் கணவனைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலினால் இரண்டுநாளும் பிராணனுடன் தத்தளித்து நின்றாள். கணவனும் மூன்றாம் நாளில் வந்தான்; அவன் முகத்தை உள்ளங் குளிரக் கண்டாள். ஆவியும் நீங்கியது. என்னே அன்பு!

டுப் பானைகளை அடுக்கிவைக்க வேண்டியிருக்கிறது. அவன் அதற்குப் பட்டிருக்கிற கஷ்டத்தைப்பற்றி நாய் என்ன அறியப்போகிறது? ஒரு நிமிஷத்தில் தனது அற்ப புத்தியால் அடியில் உள்ள சட்டியொன்றை இழுத்துவிட்டு அதனால் மேலிருக்கும் சட்டிகளை யெல்லாம் கீழே விழப்பண்ணி உடைத்து விடுகிறது. தான் செய்யும் காரியம் சரியல்ல வென்கிற ஞானம் அதன் அற்பபுத்தியில் தோன்றுகிறதேயில்லை. இதைப்போலவே நற்குணமுள்ள ஒருவன் பல நாள் கஷ்டப்பட்டுச் செய்து வரும் காரியத்தையோ, மிகுந்த பிரயாசையுடன் தேடிக்கொண்ட மதிப்பையோ, எத்தனையோ செலவுகளோடும் காப்பாற்றிய குடும்பத்தின் சமாதானத்தையோ, கௌரவ அந்தஸ்துக்களையோ அற்பகுணமுள்ளவர்கள் தமது இயற்கையான அல்பத்தன்மையால் பழுதுபடுத்தி விடலாம். அதற்காக அவன் பட்டிருக்கிற பாடுகளை செலவுகளை—பணவிரயத்தை—இந்த அல்பபுத்தியினர்கள் உணர்வது கிடையாது. அதன் அருமையும் தெரியாது. அடுக்குகிற அருமை அனைபயும் பெரிய புத்திசாலித்தனத்தையும் சேர்ந்தது. அதை உடைத்துப் பாழாக்கி நோகவைக்கும் செயலோ அகங்காரத்தையும் அற்ப புத்தியையும் சேர்ந்தது. ஒரு காரியத்தை நிறைவேற்றுவிக்க ஒருவன் எவ்வளவோ பிரயாசைப்பட்டு முடிக்கப்போகும் சமயத்தில் ஒரு அற்ப புத்திக்காரன் இடையே புகுந்து அந்தக் காரியத்தைக் குலைத்து விடும் போது, "அடுக்குகிற அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியுமா? என்று வயிறு எரிந்து சொல்வதற்கு இந்தப் பழமொழி உபயோகமாகின்றது. அதாவது அற்ப புத்தியை எடுத்துக் காட்டியபடி.




## 128. அரித்து எடுக்கிற சுப்பிக்கு ஆயத் தீர்வையுண்டா?

மரங்களிலிருந்து தானாகவே உதிர்ந்து கீழே விழுகிற சிறு சுள்ளிக்குத்தான் சுப்பி என்பது. அதைப் பொறுக்கிக் காட்டிலிருந்து ஊருக்குக் கொண்டு வந்தால் அதற்குச் சுங்கச்சாவடியில் தீர்வை வசூலிப்பார்களா? இல்லை. அது ஒரு அல்பமென்று ஒதுக்கித் தள்ளுவார்கள். அற்பத்துக்கு ஒரு விலையுமில்லை. அதுபோல் நாம் மதிக்காத ஒரு அல்பன் நமது வீட்டுக்கு வந்தால் அவனை வா வென்பதுமில்லை, இரு என்பதுமில்லை, அவனுக்காக ஒரு மரியா

---

நாடகத்தில் சேர்ந்தவர்களில் 100-க்கு 96-பேர் நன்னடக்கையுடன் உத்தமராய் இருக்க முடியாததாய் விடுமாம். அவர்கள் பேச்சும் நடத்தையும் எப்படியோ மாறிவிடுகிறதாம்! ஆனால் உலகம் மயங்குவது அங்குதானும்!

தை செய்வதுமில்லை, ஒரு விசேஷ போஜனம் சமைப்பதுமில்லை. அவனே தானாக வலிய வந்து போய்த் தொலைவான். தன்னை மதிக்காததைப்பற்றி அவனுடைய புத்தியில் தோன்றவுமாட்டாது. இவ்விதமே தனக்கு அடங்கின வர்கள் துள்ளிக்குதித்துக் கண்டபடி பேசிக்கும்மாளம் போடும்போது இதெல் லாம் எவ்வளவு நேரத்திற்கென்று அதை ஒரு பொருட்டாக மதிக்கப்போவது மில்லை. அல்ப புத்தியீனர்களின் சங்கதிகளை நெடுநாள் பட்டுத் தெரிந்திருக் கையில் அவர்களின் ஆரவார செய்கைகளை ஒரு மதிப்பு கொடுத்துப் பொருட் செய்யப்போவது எது? சப்பிக்கு ஆயத்தீர்வை யில்லாததுபோல, இவர்கள் குதிக்கும் குதிப்புக்கும் பேசும் பேச்சுக்கும் ஒரு பவிசி கொடுத்துக் கவனிக்கப் போவதில்லை. இது அற்பத்தை மதிக்கும் மதிப்பாகும்.

### 129. அயிரையும் சற்றே அறுக்குமாம் பிட்டுக்குள் போட்டுப் பிசறுமல்.

அயிரை என்பது ஒரு அல்பமான சின்னஞ் சிறு மீன். இது கருணைக் கிழங்குபோலக் காறுதலான குணமுள்ளது. இதைச் சிலர் ஏதோ நோயின் பரிகாரத்திற்காகவோ, அதிலுள்ள ஒரு சிறு குணத்திற்காகவோ காரலைக்கூடக் கவனியாமல் தின்பார்கள். ஆனல், தனியாக மற்ற மீன்களை உண்பதுபோல் உண்ண முடியாது. மாவில் சேர்த்துச் சமைத்துப் புசிப்பார்களாம். அவ் வாறு செய்யாவிடில் வாயை அறுக்குமாம். இவ்விதமே, அற்பர்களை எப் போதும் அடக்கி வைத்துக்கொண்டே போகவேண்டும். அடக்கி மீறவொட் டாமல் உடனுக்குடன் தடுத்து அவர்களிடம் வாங்கவேண்டிய வேலையும் வாங்கவேண்டும். அப்படியின்றிக் கொஞ்சம் இடம் கொடுத்தா லும், செல்லம் கொஞ்சினலும், நாம் தாழ்ந்து உட்பட்டுச் சொன்னலும் உடனே அவர்கள் மீறிவிடுவார்கள். மடத்தையே பிடுங்க முற் பட்டுக்கொள்வார்கள். அல்பர்களுடைய புத்தி அவ்வளவு பதட்டமானது, அவ்வளவு கேடு கெட்டது, அவ்வளவு விஷமுள்ளது, அவ்வ ளவு நம்பிக்கையில்லாதது. ஆகவே, அல்பத் தோடு பழகுவதில் எப்போதும் நமது கை மீறவிடாமல் அடக்கியும் ஒதுங்கியுமே போக வேண்டும். இல்லாவிடில் அயிரையைப்போல் தங்கள் குணத்தைக் காட்டத்தொடங்கி விடு வார்கள். இவர்களைவிட குடும்பத்திற்குக் கொள்ளிக்கட்டை வேறு வேண்டாம். ஐயோ! அல்பத்தின் ஒரு தன்மை எவ்வளவோ வாத னை படச் செய்துவிடுகிறது?




(தொடரும்)

---

கூச்சமில்லாமல் நாலு பேருடன் துணிந்து பேசி, பழகி, கேட்டு, பட்டு, பல சங்கதிகளைத் தெரிந்து ஞாபகத்தில் வைத்துக்கொள்பவர்கள் நல்ல அநுபவசாலிகளாய் விடுவார்கள். அநுபவம் சுலபத்தில் கிடைக்கிற சரக்கா?




# துளசிபாய்





மூன்னூறு வருடங்களுக்கு முன்னர் கூர்ஜாத்தில் சண்டை செய்துகொண்டிருந்த ஆக்பருடைய சேனைகளிற் சேரவெண்ணி இருநூறு குதிரைவீரர் ராஜபுதனத்தின் எல்லையோரமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது மாலை வேளை. மாலைச்சூரியனால் அவர்களுடைய ஆயுதங்கள் மின்னின. பட்டாடைகள் துலங்கின. அவர்கள் கையில் கத்திகளும், மேலே கவசங்களும், மார்பில் கேடகமும் இருந்தன. அவர்கள் அணிந்த ஆயுதங்களையும், இருந்த இருப்பையும் காண்போர்க்கு அவர்கள் தம் ஊரைவிட்டு இன்னும் நெடுநேரமாகவில்லை யென்பது தோன்றும். அவர்களின் தலைவன் பேர் அபாஸ் கான். அவன் நெடிய உருவமும், அழகிய வடிவமும் கொண்டவன். திரண்ட தோட்களும், அகன்ற மார்பும் உடையவன். பொருத்தமுள்ள அவயவங்களும் முழந்தாள் தடவும் கைகளும் உள்ளவன். தான் சண்டை செய்யச் செல்வது இதுதான் முதற் றடவையாதலால், சண்டையில் தனக்குக் கிடைக்கும் வெற்றியையும், புகழையும் எண்ண, அவனுக்கு உள்ளம் பொங்கி உடல் பூரித்தது.

கொஞ்ச தூரத்தில் அதே வழியாக மற்றொரு கூட்டம் போய்க்கொண்டிருந்தது. இவர்கள் பார்வைக்கு ரஜபுத்திராாகக் காணப்பட்டனர். இக்கூட்ட நடுவில் ஓர் பல்லக்கில் பெண்ணொருத்தி போய்க்கொண்டிருந்தாள். பொழுதுபோய் இருளும் சூழும் சமயத்தில் அவர்கள் ரோகணியாற்றங்கரையைச் சேர்ந்தார்கள். அங்கு சில கள்வர் வந்து ரஜபுத்திரரை அடித்து, பல்லக்கைத் தள்ளி, உள்ளிருந்த பெண்ணை வெளியிலிழுத்துப் போட்டார்கள்.

அப்பெண்ணோ திருடர்களைக் கண்டதும் அச்சத்தால் உள்ளங்கலங்கி, உயிர் நடுங்கி பேச்சுமூச்சற்றாள். அந்தோ! அவளுக்கு வயது பதினைந்து தான் இருக்கும். தந்தையின் ஒரே

---

பத்திரிகையைப் படிக்கிற பவிசியும் பழக்கமும் பத்திரிகையை ஒருவர் எடுத்துப் பார்க்கும்போதே தெரிந்துவிடும். விளம்பரத்தையே பார்த்து விட்டு மூடுவோர் எத்தனையோ பேர்! அவர்கள் தான் மகா புத்திசாலிகள்!

மகளாய் அச்சம் என்பதும், கஷ்டம் என்பதும் அறியாது செல்வமாக வளர்க்கப்பட்டவள். அவள் சிவந்த நிறத்தினள். நுண்ணிய இடையினள். பரந்த முகமும், அகன்ற கண்களும், திரண்ட கன்னங்களும், அடர்ந்த புருவங்களு முடையவள். குமிழம் பூவையொத்த மூக்கும், கோவைக் கனிபோன்ற உதடும், முல்லைப் பூவென வெளுத்து, முத்துக்களெனத் தோன்றும் பற்களும், செந்தாமரையையும் பைந்தளிரையும் பழிக்கும் உடலு முள்ளவள். கறுத்தடர்ந்த சுரிகுழலில் காவின் மலர்கள் விளங்கின. அழகானது துஷ்டமிருகத்தையும் சாதுவாக்கக்கூடுமாயின், அச்சுந்தரி மிருகேந்திரனுகிய சிங்கத்தையும் அடிமைகொள்ளும் அழகுடையாள். ஆனுல், அத்திருடர் விலங்கினும் வன்மனத்தாராதலால் அவளது அருளொழுகு கண்களையும், அன்பொழுகு முகத்தையும் கவனித்தாரிலர். அவர்கள் அணுவளவும் இரக்கமின்றி அப்பெண்மணி அணிந்த அணிகளைக் கழற்றித்தா அச்சுறுத்தினுர்கள். அவள் தேகமுழுமையும் நடுக்கமுற்றது. பேச முயன்றும் நாவெழவில்லை. அழகும், சிரிப்பும் விளங்கும் முகத்தையன்றி வேறு காணுத அம்மெல்லியலாள் கோரமும் விகாரமுமான முகங்களைக் கண்ணுற்று அவர்களால் அச்சுறுத்தவும் பட்டாளாயின் அவள் கதி யாதாகும்?

அவளுடைய அணிகளையும் ஆடைகளையும் அக்காதகர் தாமே கழற்றத் தொடங்கினர். அவள் நற்காலம் அபாஸ்கானும் அவன் படையும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களைக் கண்டு கள்ளர் ஓடலாயினர். இருபது குதிரை வீரர் அவர்கள் பின் ஓடினர்.

துக்கம் என்பது இன்னதென்று அறியாத துளசிபாய் துக்கக்கடலில் மூழ்கினுள். தனக்கு நேர்ந்த சங்கடம் நீங்கியதையும், கள்ளர் கூட்டம் பயந்தோடியதையும் அவள் காணவில்லை. ஆனுல், சற்றுப் பொறுத்துத் தலை நிமிர்ந்து பார்க்கவும் ஓர் போர்வீரன் தன்னை நெருங்கியது அவளுக்கு அச்சம் நீங்கிச் சந்தோஷம் பிறந்தது. அரக்கரினும் கொடிய கள்ளரைக் கண்ட அவள் கண்களுக்கு அபாஸ்கான் கருணைக்கடலாகும் கடவுள் போலக் காணப்பட்டான். சண்டையுடை தரித்து, கம்பீர நடையுடன் தோன்றும் அபாஸ்கானைப் போலும் அழகிய ஆண்மகனை அவள் அதுகாறும் கண்டறியாள். கருந்தடங் கண்களினின்றும் நீர் சொரிந்து கன்னங்களைக் கழுவியோடினும், குறுவியர்வையால் சுரிகுழல் நனைந்து நெற்றியிற் படிந்திடினும், அழகே உருவெடுத்தாற்போன்ற துளசிபாயைப் போலும் ஒரு சுந்தரியை அவனும் கண்டிலன்.

(தொடரும்.)

ப. சி. கோவிந்தசாமி ராஜா.

---

நல்ல காலம் வருமென்று வாயைச் சப்பிக்கொண்டு ஒவ்வொரு பொழுதையும் அடிமை வாழ்விலேயே கழிக்கிருய். நீ சுதந்திரத்துடன் தலை நிமிர்ந்து நடப்பது—அந்த அதிர்ஷ்ட நாள்—எக்காலம்?

"இவன் நமக்கென்று எங்கிருந்து எமனுக வந்து முளைத்தானே" என்று சிலரைப்பற்றி ஆத்திரப்பட வருகிற சமயமும் உண்டு. நாம் படுகிற ஆத்திரத்தை அவன் கண்டானு?




# அன்னையை மறவேல்.

அன்னையை மறவேல் அன்னையை மறவேல்
நம்மைப் பயக்க நம்மெழில் வதனங்
கனிவுறக் காண ; நனிநற வொழுகுங்
குமுதநேர் வாயின் அமுதநேர் மழலை
மொழிசெவி மடுக்க ; வழிபல கடந்து
பன்னெடு நாளாய்ப் பன்னரு மூர்கள்
பற்பல போந்து நற்பல முளவோர்
இணையிலா னடியே புணையெனக் கருதி
பன்னல மும்வெறுத் துன்னரு தவங்கள்
செய்தே மகிழ்ந்த தெய்வநேர் நம்மின்
அன்னையை மறவேல் அன்னையை மறவேல்.

ஐயிரு திங்களா் யையிரு மகட்டிற்
பொற்புறச் சுமந்தும், பற்பல பிணியின்
வாயினிற் பட்டுப் பாயினிற் புரண்டுங்
கொஞ்சமு மனதை யஞ்ச விடாது
வளங்கெழுங் கீழ்திசை யிளங்கதி ரோனே
தோன்றிய வாங்கு தோன்றலா நம்மை
யீண்டே பயந்த காண்டகு மருளின்
அன்னையை மறவேல் அன்னையை மறவேல்.

மலஜல மாதிய பலவகைக் கழிவையும்
பூவன கரத்தா லோவற வெடுத்தும்
ஈயு மெறும்பும் நோயுந் தொடரா

---

அந்த சாமானை உனக்கு எவ்வளவு பிரீதியோடும் கொடுக்கப்பட்டது தெரியுமா? அதை நீ வேறொருவருக்குக் கொடுத்துவிட்டது—அதைக் கொடுத்தவரது உள்ளன்பை யறியாத மடமையாலன்றோ?

வண்ணம் பகலும் நண்ணு மிரவும்
விழிதுயி னீத்துக் கழிபே ரன்போ
ணேினை வெறுத்தும்; மாணுற நம்மின்
நலனே தன்பெரு நலனென வுன்னியும்
நம்மையே தன்னின் செம்மைசே ராவி
யெனமகத் தெண்ணியுங்: கணமுறக் காத்த
அன்னையை மறவேல் அன்னையை மறவேல்.

அன்னையி னன்பை யுன்னரு மாயிரந்
தாலின் சேட னுலுஞ் சாற்ற
வொவ்வா தென்று லெவ்வமார் சின்னுட்
பல்பிணிச் சிற்றறிவு புல்கிய நம்மாற்
சொல்லவு முடியுங் கொல்லோ! ஆதலால்
எஞ்சோத ரிகாள்! எஞ்சோ தரர்காள்!
ஔவைக் கிழவியின் செவ்வைக் கிளவியாம்
"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"
எனுமொழி யதனை யனுதின முன்னி
யன்னையி னடியை யின்னே
துதித்துப் பன்னுள் கதித்து வாழுவமே.

P. S. M. E. முஹம்மது யாக்கூபு சாஹீப்.

II

## கண் போற்றல்.

அந்திப் பொழுது அதிகம் படியேல்
நோய்க்கா லத்தே நோக்கேல் நூலை
நடந்து மூர்ந்தும் நகைத்தும் படியேல்
நுண்ணிய வெழுத்தை நுணுகிப் பாரேல்
நீண்ட படிப்பில் நிறுத்திடு நோக்கு

---

ஒவ்வொன்றிலும் மனதை ஈடுபடுத்திவிட்டு புத்தியைப் பறிகொடுத்து நிற்பவன் எந்த வழியிலும் கெட்டிக்காரனுக முடியாது. ஏதேனும் ஒன்றில் உறுதி நெஞ்சம் வேண்டும். எந்தத் தொழிலிலும் ஊன்றி நிற்கவேண்டும்.

கூத்துங் களிப்பும் குற்றம் பயக்கும்
இரவின் விழிப்பு என்றும் இடும்பை
அசுத்தக் கையால் அங்கண் தொடேல்
கசக்கித் துடைத்தல் கசடு பயக்கும்
படுத்துப் படியேல்
களைத்தபின் படியேல்
பசித்தபின் படியேல்
புசித்துடன் படியேல்
கிட்டவும் எட்டவும் பிடியேல் நூலை
கோணிக் குந்தி குனிந்தும் எழுதேல்
அனலிக் கதிரை இதழில் தடுப்பி
வெளிச்சம் வருதல் பின்புறத் திருந்தே
இடப்புற வெளிச்சம் என்றுங் குணமாம்.

 மு. துரைப்பிள்ளை.

---

நமது பெண்மக்கள் அன்னிய ஆடவர்களோடு தாராளமாகப் பேசவும் பழகவும் வேண்டுமென்று நவநாகரீகம் விரும்புகிறது. அவ்விதம் பழகுவதில் ஒழுங்கு தவறுதிருக்க பிற மாதர்களை அன்னையராகப் போற்றும் உயரிய ஞானம் ஆடவர்களிடம் முதிர்ந்துளதா? அது இல்லாதவரை வீண் கூச்சலில் பயனென்னவோ? நம்பிக் கற்பு மோசம்போன காரிகையர் எத்தனை பேர்?



கமலாப் பழத்திற்கு ஆசைப்பட்டு விலைக்கு வாங்கிப் புசித்தவன் தன் நண்பனின் கமலாத் தோட்டத்தில் பழங்களைப் பார்ப்பதன்றி உண்பதில்லை. அங்கு நெஞ்சு தெவிட்டிப் போகிறது. சொற்பமா யிருக்கையிலும், கிட்டாதபோதும், தூர இருக்கையிலுமே ஆசையும் ஆவலும் பெருகி வளர்கிறது. அவை பூர்த்தியாய்க் கிடைத்தபின்போ அடங்கிவிடுகிறது. விவாகவினைவும் இப்படியே.

---

எப்படிக் கேட்பது என்ற லஜ்ஜையுடன் உன் முன்னல் வந்து நிற்பவனின் முகக்குறிப்பை நீ அறியாததென்னவோ? அல்லேல், தெரிந்தும் ஜாடையாக இருந்துவிடும் தந்திரமோ? கொடுக்கிற மனது இப்படி இராது.

---

தங்களுக்கு ஆகவேண்டிய காரியம் இருக்கும்போது மாத்திரம் முழ நீட்டம் க்ஷேம விசாரிப்பு எழுதி முடிவில் தங்கள் காரியத்தையும் காட்டிக் கடிதம் தீட்டுகிருர்கள். அது ஒரு காரியார்த்தமாக ஒருவருக்கு எழுதும் போது செய்யவேண்டிய லௌகிக மயக்குத் தந்திரமாக்கும்!




(52-ம் பக்கத் தொடர்ச்சி.)

383. Then come the wild whether, come sleet or come snow, We will stand by each other, however it blow.

LONGFELLOW.

பிறகு பொல்லாத காலம் வருகிறது. கல் மழை, பனி எது வந்தாலும் வரட்டும்; அது எவ்வளவு கடுமையாயிருந்தாலும் நாம் ஒருவருக்கொருவர் துணையாய் நிற்போம்.

லாங்பெல்லோ.

384. How beautiful are these autumnal woods! The wilderness doth blossom like the rose! LONGFELLOW.

இலையுதிர் பருவத்தில் காடுகள் எவ்வளவு அழகாய் இருக்கின்றன! வனம் ரோஜாவைப்போல் செழிப்பாய் மலர்கிறது. லாங்பெல்லோ.

385. There is no substitute for thorough going, ardent, and sincere earnestness. DICKENS.

திறமாயும், உற்சாகமாயும், உண்மையாயுமுள்ள ஊக்கத்திற்குத் தகுதியான பிரதி வேறு ஒன்றும் கிடையாது. டிக்கன்ஸ்.

386. It becomes no man to nurse despair, But in the teeth of clench'd antagonisms To follow up the worthiest till he die. TENNYSON.

எந்த மனிதனுக்கும் மனத்தளர்ச்சியடைதல் அழகல்ல. ஆனால், எவ்வித கடுமையான பகைகள் வரினும் சாகுமளவும் மிகவும் யோக்கியமான வழியைப் பின்பற்றுவதே அழகு.

டென்னிஸன்.

387. A friend may well be reckoned the masterpiece of nature. EMERSON.

ஒரு சிநேகிதன் என்பவன் இயற்கையின் செயல்களில் மிகவும் சிரேஷ்டமானதெனக் கருதப்படுகிறது.

எமர்ஸன்.

388. Byegones shall be byegones, and a new page turned for you to write your lives in. DICKENS.

போனவை போகட்டும். இனியாவது நல்ல வாழ்க்கை வாழ ஆரம்பிக்கப் படட்டும். (உன் நல்வாழ்க்கையை எழுத புதிய பக்கம் திருப்பப்படட்டும்.) டிக்கன்ஸ்.

389. Our moral feelings are so interwoven with our intellectual powers, that we cannot affect the one without in some degree addressing the other. RUSKIN.

நம்முடைய ஸன்மார்க்க உணர்ச்சிகள் ஞானசக்திகளோடு நாம் ஒன்றில்லாமல் மற்றொன்றை மாத்திரம் தனியாக வெளிப்படுத்தமுடியாதபடி அவ்வளவு நெருக்கமாய்ப் பிணைக்கப்பட்டிருக்கின்றன. ரஸ்கின்.

---

புகழை எண்ணாதே. உன் கடமையைச் சரிவரச் செய்தாயா என்று மட்டும் பார்த்துக்கொள். பொருளை எண்ணாதே. வேண்டியதில் செலவிடு. மேலும் மேலும் கடவுள் தருவார். உலகுக்கு உழைக்கவே பிறந்ததாக நினை.

390. A fool always wants to shorten space and time; a wise man wants to lengthen both.
RUSKIN.

ஒரு முட்டாள் தேசகாலத்தைக் குறைக்க விரும்புகிறான். ஒரு புத்திமான் இரண்டையும் நீடிப்பிக்க விரும்புகிறான். ரஸ்கின்.

391. Neither covetous men nor the Grave can inherit anything; they can but consume. Only contentment can possess.
RUSKIN.

பேராசையுள்ளவனும், ஆழ்ந்த கருத்துள்ளவனும் ஒன்றையும் உரிமை வழியாய் அனுபவிக்க முடியாது. அவர்கள் அழிக்கலாமே ஒழிய ஒன்றையும் அடைய முடியாது. ரஸ்கின்.

392. Lay aside life-harming heaviness, And cultivate a cheerful disposition.
SHAKESPEARE.

வாழ்க்கைக்குக் கெடுதலை விளைக்க கூடிய துக்கத்தை ஒழித்து உற்சாகத்தைப் பயிர் செய். ஷேக்ஸ்பியர்.

393. In real life...the serious and the comic, the sublime and the grotesque, the pathetic and the ludicrous, are mingled together.
LONGFELLOW.

உண்மையான வாழ்க்கையில் வினையும், விளையாட்டும், மாட்சிமையும், கோமாளித்தனமும், பரிகாசமும், இரக்கமும், ஒன்றாகக் கலந்திருக்கின்றன. லாங்பெல்லோ.

394. Men's judgments are A parcel of their fortunes.
SHAKESPEARE.

மனிதர்களுடைய விவேகங்கள் அவர்களுடைய அதிர்ஷ்டங்களுக்கு முக்கிய பாகமாய் இருக்கின்றன.
ஷேக்ஸ்பியர்.

395. Thine be like joy and treasure, Peace, enjoyment, love, and pleasure! BURNS.

உன்னுடைய வாழ்வானது சந்தோஷம், பெரிய நிதி, சாந்தம், அன்பு இவைகள் போன்றதா யிருக்கட்டும்.
பர்ன்ஸ்.

396. Life is not so short but there is always time enough for courtesy.
EMERSON.

வாழக்கையானது மரியாதை காண்பிக்கப் போராதபடி அவ்வளவு குறுகியதல்ல. மரியாதை காட்டப் போதுமான காலம் இன்னும் இருக்கிறது. எமர்ஸன்.

397. Fair be the path beneath your feet, Bright be the skies above you. Where'er you go, still may you meet Friends that will truly love you!
CLIFTON BINGHAM.

நீ நடக்கும் வழி நல்லதாகவும், உன் காரியங்கள் களங்கமற்றும் இருக்கட்டும். அப்படி இருந்தால் நீ எங்கு சென்றாலும் நீ உன்னை உண்மையாய் நேசிக்கும் நண்பர்களைக் காண்பாய். க்ளிப்டன் பிங்ஹம்.

390. To make your children capable of honesty is the beginning of education. Make them men first, and religious men afterwards, and all will be sound.
RUSKIN.

உன் குழந்தைகளை யோக்கியர்களாய் இருக்கும்படி செய்வதுதான் அவர்களுக்கு முதற் படிப்பு. அவர்களை முதலில் மனிதர்களாகவும், பிறகு வைதீகர்களாகவும் செய். பிறகு எல்லாம் நன்றாய் முடியும். ரஸ்கின்.

(தொடரும்.)

P. E. பாஷியம் நாயுடு.




# மதியற்ற மணத்தின் முடிவு.



"ஏண்டி! குமுதம்! என்றைக்குப் பார்த்தாலும் ஏனிப்படி முகவாட்டமாகவே யிருக்கிறாய்? இந்தக் காலத்தில் நரைத்துத் திரைத்த கிழங்களுங்கூட உயர்ந்த வாசனைத் தைலங்கள், பரிமள முக வசீகரப் பொடிகள், சோப்புகள் முதலியவற்றை யுபயோகித்துத் தளுக்குங் குலுக்குமாக மினுக்குகிறார்களே? உனக்குமட்டும் என்ன ஞானம் பிறந்துவிட்டதா? பைத்தியக்காரி! நேற்றுப் பிறந்த மீனுவின் மகள் செல்வத்தைப் பாரடி, அவளுக்கு வருஷம் இன்னும் எழு ஆகவில்லை; அவள் உடுக்கிற உடையும் நடக்கிற நடையும் என்னவென்று சொல்வது?" என்று ஒருநாள் காலை "கமலாபுரம்" கற்பக விநாயகர் பூந்தோட்டத்தில் மலர் பறிக்கச் சென்ற ஜானகி அங்கே நின்றுகொண்டிருந்த குமுதத்தைப் பார்த்துக் கேட்டாள்.

குமுதம்—அக்கா! அதெல்லாம் இருக்கட்டும். என் மனதிலுள்ளதை உன்னிடத்தில் சொல்லாமல் வேறே யாரிடத்தில் சொல்லி ஆறப்போகிறேன். இந்த மூன்று வருஷமாகப் பட்டபாடு ஈசனுக்குத்தான் தெரியும். பசி யென்பதே இல்லை. சோற்றை நினைக்கும்பொழுதே குமட்டல் வருகிறது. இப்படிப்பட்டவளுக்கு வாசனை யெண்ணெயும் சோப்புந்தானா குறைவு?

ஜானகி—ஏண்டி; இப்படிச் சொல்றது உனக்கு அடுக்குமா? உனக்கென்ன பணத்திலே குறைவா? படிப்பிலே குறைவா? பிறந்தவிடத்திலே அல்லது வாழ்க்கைப்பட்ட இடத்திலே குறைவா? உடம்பிலே வியாதி யென்று சொன்னால் எத்தனை டாக்டர்கள் ஓடிவந்து பார்க்கக் காத்திருக்கிறார்கள். ஏன் இப்படிப் பஞ்சக் கோலமாய்த் திரிகிறாய்?

குமு—(மெல்லிய குரலில்) சேஷியம்மாள் அண்ணன் மகன் மாதவன் என்பவரை மறந்திருக்கமாட்டாயென்று நினைக்கிறேன்.

ஜா—ஆமாம்; இவ்வளவு சீக்கிரத்தில் அவனை யார் தான் மறப்பார்கள்? அவனுடைய படிப்பென்ன, அறிவென்ன, அழகென்ன, எல்லாரிடத்திலும் காட்டும் பணிவும் பொறுமையுமென்ன? ஐயோ பாவம்! அவன் தலைவிதி யிப்படியாச்சு. நீயும் அவனும் ஒரு நிமிஷமும் பிரியாமல் படிப்பதும் விளையாடுவதுமாக இருந்தீர்களே. அவன் போன இடம் உனக்குக்கூடச் சொல்லவில்லையா?

என்றதும் குமுதம் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டாள்.

ஜா--குமுதம்! அழாதே! அழாதே! அவனைக் கண்டால் அன்றைக்குப்

---

வெளியூரில் உள்ளவனுக்குக் குழந்தைகளின் மீது ஞாபகம் தோன்றிவிட்டால், எந்த ருசிகரமான பதார்த்தமும் நாவுக்கு இனிப்பாய் இராதாம்.

பிறந்த பிள்ளைகூடக் கொஞ்சிக் குலாவியும்விளையாடுமே! அவனைப் பற்றி இப்பொழுது என்ன ?

குமு—என்னவா ? என் மனதில் உள்ளதை யெப்படிச் சொல்வேன் ? இரவு வெகுநேரம்வரை தூக்கம் வராமல் பிதற்றியவண்ணமே படுக்கையில் புரண்டுகொண்டிருந்தேன். விடிய சாமம் இருக்கும். அயர்ந்து தூங்கினேன். தூங்கினேனென்ரு சொன்னேன் ? இல்லை, இல்லை ; தூக்கம் வரவில்லை.................

ஜா—ஏன் மயங்குகிருய் ? இன்னும் மனதைத் திடப்படுத்தாமலே பேசுகிருயே. என்னை முற்றிலும் நம்பு.

குமு—அக்கா! அந்த மாதவர் இந்தஊரைவிட்டுப் போனதிலிருந்து என் சித்தம் ஒரு நிலையிலில்லை. நானும் அவரும் முதலிலிருந்தே அளவற்ற அன்புள்ளவராக வாழ்ந்தோம். அந்த அன்பு மிக மிக உயர்ந்த அன்பாக மாறும்பொழுது ஆண்டவன் அதைக் கண்டு தாளாமல் நடுவே துண்டித்து விட்டான்.

ஜா—அதைப்பற்றி இப்பொழுது என்ன? அவன் போனது எல்லோருக்கும் வருத்தந்தான்.

குமு—எல்லோருடையதைப் போன்றதல்ல என் வருத்தம். அதை விவரித்துச் சொல்லவும் இயலாது.

ஜா—அது கிடக்கட்டும். அப்புறம் நடந்ததென்ன ?

குமு—மாலை மணி ஐந்து இருக்கும். சூரியன் தனது இளங்கதிர்களை மரங்களிலும் செடிகொடிகளிலும் வீசிப் பொன்னிறமாக்கிக் கொண்டிருந்தான். தென்றற் காற்று மெல்லென வீசிக்கொண்டிருந்தது. மல்லிகையும் முல்லையும் மணம் கமழ்ந்து நின்றன. குயில்கள் இன்னிசை யெழுப்பின. நாம் இப்பொழுது இருக்கும் இதே பூங்காவில், பாவியேன் தன்னந்தனியாய் நின்று கொண்டு, மாதவா! மாதவா! நீ சென்ற இடம் இன்னதென்று இந்த ஏழைக்கு இன்னமும் அறிவியாதது ஏனே ? என்பால் எப்பிழை கண்டாய் ? இனி வாழேன், உயிர்தரித்து வாழேன் இவ்வுலகில்,— என வருந்திப் புலம்புகையில், யாரோ ஒருவர் என் பின்புறம் நின்று என திருகண்களையும் பொத்தி நின்ரூர். ‘என் இரகசியத்தை யாரோ அறிந்து கொண்டனரே’ யென்று திடுக்கிட்ட சிந்தையளாய் ‘கண் வலிக்கிறது கையை யெடுங்கள், கையை யெடுங்கள்’ என்று கதறினேன். அக்கா! ஜானகி! அப்பொழுது நானடைந்த ஆச்சரியத்தை யெவ்வாறு சொல்வேன் ? கட்டழகன், கருணை விலாசன், கல்வியில் மிக்கான், கணப்பொழுதாயினும் என் கருத்தை விட்டகலாச் சீலன், மாதவனே என் முன் தோன்றி ‘குமுதம்! இத்தனை வருஷமாக உன்னைத் தனியே விடுத்துத் துன்பத்தில் ஆழ்த்திய இந்தக் கொடியனை மன்னித்துவிடு. நான் எங்கிருந்தாலும் உன்னை மறந்து வாழ்வேனு ?’ எனக்கூறி என் புல்லிய கையைத்தொட்டு முத்தமிட்டார். நானும் என் வயமிழந்து அவர் வயமாகி நின்றேன். சில கணத்தில் சுய அறிவுவரப்பெற்று, நான்‘ ஐயோ! யாராவது கண்டால் என்ன நினைப்

---

போ! போ! போ! சிநேகிதர்கள் வந்துவிட்டார்கள் போ போ போ! ஆனல் இந்த வெட்டிக் கூட்டங்களில் எவன் உனக்கு உதவுகிறவனே அவனை நீ அறிந்திருக்கிருயா ? அந்தச் சுங்கதிதான் நிச்சயமில்லை.

பார்கள்? என்கையை விட்டுவிடுங்கள்' என்று மெதுவாகக்கூறி யவரிடத்து நின்றுந் தப்ப முயன்றேன். அவர் என்னை எளிதில் விடுபவராகத் தோன்றவில்லை. ஐயோ! அந்தச் சுகம் அதற்குமேல் நீடித்திருக்கப் பாவியேன் கொடுத்துவைக்கவில்லை. திடுக்கென விழித்தேன். பாழுந் தரையில் கோரைப்பாய்மேல் தன்னந் தனியே படுத்துப்புரளும் என் நிலைமையை யறிந்தேன். அதற்குமேல் தூக்கம் வரவில்லை; செய்வதின்னதென்றும் தோன்றவில்லை.

ஜா—என்ன, உனக்குப் புத்தி இப்படி விபரீதமாகிவிட்டது? நேசமென்றால் இதுவா நேசம்? 'கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருஷன்' என்று நம் பெரியவாள் சொல்லியிருப்பதை அலட்சியஞ் செய்யலாமா? இனி, நீ உன் புருஷனையன்றி வேறு யாரை நினைத்தாலும் மகா பாதகமாச்சே!

குமுதம்:—நான் மாதவனையன்றி வேறெவரையும் என் மனதில் நினைத்திருக்கவில்லை. திடீரென்று அன்றுதான் நான் வேறொருவர் மனைவியென்று எனக்குப் புதிதாகத் தெரிந்தது. நான் அறியாதவரை விரும்பாதது கற்பு தவறியதாமா? ஏதோ என்னாலானமட்டும் என் மனத்தை யடக்க முயலுகிறேன். என்மீது பிழையில்லை. நான் என்னை அறியாத மூன்று வயதில் என் பெற்றோர் வெட்டிய படுகுழி இது. நான் என்ன செய்வேன்.

***

கமலாபுரம் என்பது தஞ்சாவூர் ஜில்லாவைச்சார்ந்த ஓர் அழகிய சிறு கிராமம். காவிரியாற்றினின்று பிரிந்து வரும் "ஐயன் வாய்க்கால்" என்னும் ஒரு சிறு கால்வாய் அவ்வூருக்கருகே ஓடிக்கொண்டிருக்கிறது. அவ்வூரில் வசிப்பவர்களில் . பெரும்பான்மையோர் பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் இருபோகமும் நெல் விளையும் உயர்ந்த நஞ்சை நிலங்கள் ஏராளமாகவுண்டு. கிருஷ்ணையர் என்பவர் அவ்வூரிலேயே பெரிய மிராசுதாரர். அவருக்கு இரண்டு பையன்களும் ஒரு பெண்ணும் உண்டு. பெண்தான் எல்லோருக்கும் மூத்தவள். அவள் பெயர் குமுதம். மாதவன் என்னும் சிறுவன் அவ்வூர் சிதம்பரையரின் மைத்துனர் மகன். சிதம்பரய்யர் தனக்குப் புத்திரப் பேறில்லாமையால் தனது மைத்துனர் திருவாரூர் தியாகராஜ ஐயரின் இளைய குமாரன் மாதவனைச் 'சுவீகார'மாக எடுத்துக்கொண்டார். குமுதவல்லி ஐந்து வயதுப் பேதையாயிருந்தபொழுது மாதவன் ஏழாண்டுச் சிறுவன். அவ்விருவரும் இளமையில் கமலாபுரத்து வித்வான் கல்யாணராமையரிடத்திலே கல்வி பயின்றனர். கல்வி பயில்வதிலாயினும், விளையாட்டுகளிலாயினும் ஒருவரைவிட்டு ஒருவர் தனியே பிரிந்து நிற்பதில்லை. வீட்டிற்குப் போகும்பொழுதோ, அல்லது பள்ளிக்கு வரும்பொழுதோ இருவரும் சேர்ந்தே போவதும் வருவதுமாக இருப்பார்கள். எங்கு கண்டாலும் இருவரையும் சேர்ந்து காணலாமேயன்றித் தனியே காண முடியாது.

பிள்ளைகள் விளையாடும் விளையாட்டுகளில் எத்தனையோ வகையுண்டு. அவற்றுள் "பொம்மைக் கல்யாணம்" என்பது ஒன்று. "பொம்

---

என்ன அப்பா! அவ்வளவு கூர்மைமாய் என்னை உற்றுப் பார்க்கிறாய். உன் உள்ளத்தில் நீ மறைத்துவைத்திருந்த கசுமாலத்தை அப்படியே வெளியில் கொட்டிவிட்டேனென்றா?

மைக் கல்யாண'' மென்றால் இவ்வுலக மாகிய நாடக மேடையிலே பெரிய வர்கள் நடிக்கும் இல்வாழ்க்கையாகிய நாடகத்தைப் பிள்ளைகள் ஆடிப் பழகு வது. மரத்தாற்செய்த இரு பொம்மை களை மணமகன் மணமகளாக வைத் துக்கொண்டு இரண்டிற்கும் திரும ணம் நடத்தும் பாவனையாக விளை யாடுவது. இவ்விளையாட்டை மாதவ னும் குமுதமும் சேர்ந்து வேறு சில சிறுவர் சிறுமிகளோடு நிகழ்த்தினர். மரக்கட்டை மாப்பிள்ளைக்குக் குமுத மும் மாதவனும் தாயும் தந்தையும் ஆனார்கள். பெண் பொம்மைக்கு வேறிருவர் "ஜோடி'' சேர்ந்தனர். பெண் பேசவும் மணவினை நடத்த வும் உறவினராக அமர்ந்தனர் வேறு சில சிறுவர்கள். அவ்வூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள் மகன் 'கிட்டு' புரோகித ராக அமர்ந்தான். மணற்சோறும், கல்தேங்காயும், பூவரசு வெற்றிலையும் ஏராளமாக வந்து குவிந்தன அக் கல்யாண வைபவத்திற்கு. இவ்வாறு மிகச் சம்பிரமமாகவும், சந்தோஷகர மாகவும் நடந்தேறியது அத்திருமண வைபவம். ஐயோ! பாவம்! இவ் விளையாட்டே பின்னால் வினையாக முடியுமென்று யார்தான் நினைப்பார் கள்?

விளையாட்டு முடிந்து பிள்ளை கள் தனித்தனியே பிரிந்ததும் மாத வன் பேதையான குமுதத்தைப் பார்த்து, "குமுதம்! நீயும் நானுமே பின்னால் புருஷன் மனைவியாக இருக்கவேண்டும். உன்னுடைய தாயும் தந்தையும் உனக்குக் கல்யா ணம் நடத்த ஏற்பாடு செய்யும் பொழுது 'நான் மாதவனையன்றி வேறெவரையும் மணக்கமாட்டேன்' என்று கூறிவிடு. நானும் எனது வீட்டில் 'குமுதத்தைத் தான் கல்யா ணம் செய்துகொள்ளுவேன்' என்று கூறிவிடுகிறேன். பின்னால் நாமிருவ ரும் நலமாக வாழலாம். உன் சம்மதம் என்ன? என்று கேட்டான். குமுதம் தரையைப் பார்த்தவண் ணமே சிரித்துக்கொண்டு நின்றாள். உனக்குச் சம்மதமில்லையாக்கும்! சரி! இனிமேல், நீ வேறு நான் வேறு தான் என்று முணுமுணுத்தான் மாத வன். பேதைக் குமுதம் மாதவா! என்ன உனக்குக் கோபம் இப்படி வந்துவிட்டது? உன்னைத் தவிர வேறு யாரையாவது நினைப்பேனா? என்றாள். இருவரும் சிரித்த முகத் தோடு வீடு சேர்ந்தனர். அப்பேதையர் இருவரும் தங்கள் நினைவு தவறான தென்பதை யெங்ஙனம் அறிவர்? குமுதத்தின் கழுத்தில் விளங்கும் தாலிச்சரட்டை அழகுக்கணிந்துள்ள மற்ற நகைகளோடு ஒன்றாக மதித்த னர் குமுதமும் மாதவனும். குமுதத் திற்கு வருடம் மூன்று நிறையா முன் னரே, அவளை முருங்கையூர்ப் பெருஞ் செல்வர் சுந்தரேச சாஸ்திரி களுக்கு உரிமையாக்கிவிட்டனர் அவ ளுடைய தாயும் தந்தையும்.

(தொடரும்.)

பெ. இராமாநுஜ ரெட்டியார்.

---

அதிகமாய்ப் பிறரை வயிறெரியச்செய்கிற உத்தியோகஸ்தர்களும் குமாஸ்தாக்களும் சீக்கிரத்திலேயே அந்த வயிற்றெரிச்சலின் பலனாகத் தாழ்ந்த பதவிக்கு மாறவதாவது குற்றங்களில் கைவைத்து சிக்கிக்கொண்டுவிடுகிறார்கள்.

---

தபாலாபீஸ் குமாஸ்தா போஸ்ட்மாஸ்டர் ரஜாவில் போயிருக்கும் பொழுது போஸ்ட்மாஸ்டராகித் தடபுடல் செய்து விடுகிறார். அவர் திரும் பியதும் பழயபடியே அந்தப் பாழும் குமாஸ்தா வேலை! ஐயோ பாவம்!






இன்று கூடிய நமது கடையில் யானை ராயர் "குளிர்ந்த **கொள்ளி**" எப்படி யிருக்குமென்று கேட்டார். அதற்குத் தொந்தித் தேவர்—"குளிர்ந்த கொள்ளியைக் காரியக் **கொள்ளி** என்றும் சொல்லலாம். அந்தக்கொள்ளியை எவ்வளவு கோபிப்பினும் கோபமே வராது. பதிலே பேசாது. வெகு அடக்கமாகத் தலை வணங்கி நிற்கும். நமக்கும் ஐயோ பாவம்! என்று தோன்றும். எவ்வளவு பிரித்துத் தூரத்தூரத்தினாலும் சிரித்துக்கொண்டே நமது வாசலுக்கு மறுபடியும் வந்து நிற்கும். நம்மீது வெகு பிரியம் காட்டிவரும். எள் என்பதற்குள்ளே எண்ணெயைத் தயாராகக் கொண்டு வந்து கொடுக்கும். வெகு உறவு, வெகு நேசம், வெகு பிரியமாய்க் குலாவும். நாம் கோபுரத்தைத் தூக்கி வா வென்றாலும் உடனே தூக்கி வந்துவிடும். இதிலே மயங்கி நம் வீட்டுக்குள் புகவிட்டாலோ, அடுப்பங்கரைக்கு ஓடும். முக்கியமாய் வீட்டுப் பெண்களைத் தனக்கு வேண்டியவர்களாகச் செய்துகொள்ளும். அவர்களிடம் அதிக சரசம் மிஞ்சிக்கொஞ்சும். சில துடுக்கான வார்த்தைகளும் பேசும். இதிலே பெண்களும் இந்தக் கொள்ளியோடு அதிகம் பழகிப்போக அந்தப் பழக்கமிகுதியிலே இந்தக் கொள்ளி கொஞ்சம் அதிகாரப் பேச்சுகளையும் அவர்களிடம் வீசும். கொஞ்சம் கைநீட்டித் தடபுடல் செய்யவும் தலைப்படும். இவ்வளவும் வீட்டுக்காரனுக்குத் தெரியாமல் அடுப்பங்கரையிலே நடக்கிற சங்கதி. பிறகு அந்தக் கொள்ளியானது வீட்டுக்கே ஒரு முக்கியஸ்தனாகி விடும். "அவன் வந்து தான் அந்த வேலை ஆகவேண்டும்"—என்று சொல்லும்படியான அவ்வளவுக்கு அவசியப்பட்ட பொருளாகத் தன்னை ஆக்கிக்கொண்டு ஜக ஜால சித்து வித்தைகளெல்லாம் செய்யப் புகும். சில சமயங்களில் பெண்களின் கற்பையே உறிஞ்சிவிடப் பார்க்கும். சில இடங்களில் உறுஞ்சியும்விடும்"—என்று சொன்னார்.

***

உடனே அல்லாபிச்சை பேச எழுந்தார். "சுடுகிற கொள்ளியை அது சுடுமென்று நம்பலாம்; நம்பி ஜாக்கிரதைப்படலாம். ஆனால், இந்தக் குளிர்ந்த கொள்ளி யிருக்கிறதே, இது பொல்லாப் புழுமலி நோய். இது செய்யும் வேலை வெளிக்கு வாவே வாராது. வெளிக்குத் தெரியாமல் உள்ளுக்குப் புரை எறிக்கொண்டே போகும் புண்ணைப் போன்றது. குடும்ப கௌரவத்தையே கெடுத்து விடும். மானத்தை மண்ணாக்கிவிடும். வீட்டுப்பெண்களும் கூட அக்கொள்ளியின் பக்கமே பேச ஆரம்பித்து விடுவார்கள். யாரும் இல்லாத அநாதியான நிலையில் அந்தக் குளிர்ந்த

---

ஆசாரம் என்பது நல்லொழுக்கத்தின் முக்கியமான ஒரு கட்டுப்பாடேயன்றி வேறல்ல. ஆபாஸத் தாசி வீட்டிலிருந்துகொண்டு ஆசார நடிப்பு நடிப்பது தன்னை யோக்கியனாகக் காட்டுவதற்கு மயக்குகிற ஒரு தந்திரம்!

கொள்ளிதான் எவ்வளவோ உதவிற்று என்று பெண்கள் உறுமுவதற்கு ஆரம்பித்துக்கொண்டால் வீட்டுக்கார னுக்கு இன்னும் கஷ்டமாய் விடும். அவர்கள் துடுக்கான ஒரு காரியம் செய்துவிட்டால் அதைப் பார்த்தவர் களும் அதை மறைத்து விடுவார்கள். அதை வேறு அன்னியர் ரூபிக்கவும் முடியாமற் போய்விடும். வீட்டிற் குள்ளே இந்தக் கொள்ளிக்கட்டைக் குப் பரிந்து பேசக்கூடிய ஒரு கட்சி யும் தோன்றிக்கொள்ளும். இது இன் னும் பெரிய ஆபத்து! இந்தக் கொள்ளி வீட்டுக்காரனைத் தன் வசப் படுத்திக்கொண்டு அவனைச் சேர்ந்த வர்களையெல்லாம் அதிகாரம் செய்ய வந்துவிடுகிறதுண்டு. வீட்டுக்காரனும் சாடையாய் இருந்து விடுவான். இந் தக் குளிர்ந்த கொள்ளி உண்டாக்கு கிற கலகவேர்கள் வெகு ஆழமாய்க் குடும்பத்தில் ஊன்றிக்கொள்ளும். ஆகவே, முதன் முதலில் தானே இந்தக் குளிர்ந்த கொள்ளியை அது என்ன அதிக உறவு, நேசம் கொண்ட தாயிருந்தாலுங்கூட வீட்டு வாயிலை மிதிக்காதபடி செய்து தூர ஒதுக்கி எப்போதும் விழித்த கண்ணுயிருந்து ஜாக்கிரதைப் பட்டால்தான் — பின் னுக்குவருகிற அபாயங்களுக்கெல்லாம் ஆளாகாமல் தப்பித்துக்கொள்ளலாம்'' என்று சொல்லி முடித்தார்.

***

அதன் பிறகு பிசுபிசுப்புப்பிள்ளை தமது தொண்டையைக் கனைத்துக் கொண்டு—''எடுத்துக் காட்டினுலும் படித்துப்பார்த்தாலும் விளங்காத சில சங்கதிகள் என்னென்ன?'' என்று வினவினர். அதற்குத் தாண்டவக் கோன் விடை பகர்ந்தார். எவ்வளவு தான் சுட்டிக்காட்டினுலும், தானே அதைப்பட்டு உணராவிடில் அவ்வளவு தெளிவாய்த் தெரிந்துகொள்ள முடி யாது. ஒரு கதையில் ஒரு விஷயத் தைக் கற்பனை செய்து சேர்க்கப்படு கின்றது. அதைச் சாதாரணஸ்தர்கள் வாசித்தால் கற்பனையின் சாதுர்யத் திற்கு மட்டும் மெச்சிப் புஸ்தகத்தை மூடிவிடுவர். அவ்வளவேயன்றி அக் கற்பனையின் இன்ப துன்பங்களைத் தம் மனத்தால் நுகர இயலா. ஆனல், அக்கற்பனைச் சரக்கையே தன் ஜீவி யத்தின் ஓர் பகுதியில் கண்டனுபவித் தவனொருவன் அக்கற்பனையை வாசிக் கும்போது ஒரு துள்ளு துள்ளிப் போகிறுன்! தான் முன்பு அனுப வித்து நொந்தோ—பூரித்தோ உள்ள விஷயத்துக்குப் பொருத்தமா யிருப் பதால் உள்ளுணர்ச்சி ததும்பப் பெற்ற வனய் அக்கற்பனை நயத்தின் முழுச் சுவையையும் தன்னிலே உணர்வோனு கிறுன். ஒரு தாமரை மலரை அது இன்னவாறு இருக்குமென்று ஒருவன் படத்தில் சித்தரித்துக் காட்டுகிறுன். அதைக் காண்பவன் அது படத்தில் அமையப்பெற்றுள்ள அழகுக்கு வியந்து அவ்வளவில் நின்று விடுகி றுன். அவன் தாமரையை நேரில் கண்டவனல்லவாதலின் அவ்வளவுட னேயே அவனது உணர்ச்சியின் எல்லை அடங்கித் தணிந்து விடுகிறது. ஆனல் உண்மையிலேயே தாமரை மலரை நேரிற்பார்த்து அனுபவித்திருப்பவன் கற்பனையாய்ப் படத்தில் சித்தரித் துள்ள தாமரையைக் கண்டதும், ஆ! எத்துணை அற்புதமாக உண்மைத் தாமரை மலர்போல் சித்தரிக்கப்பட் டிருக்கிறது என்று ஆநந்திக்கிறுன். இந்த அநுபவ அபூர்வமான ஆநந்தத்

---

தங்களின் உத்தியோகப்பெருமையில் ஜனங்களை வாட்டி தண்டம் விதித்து சர்க்காருக்கு லாபத்தை யுண்டாக்குவது ஒரு கௌரவமெனச் சிலர் எண்ணம். ஜனங்களின் வயிற்றெரிச்சல் இவர்களுக்குப் பலனே தவிர, சர்க் கார் இவர்களை வாழ்த்திக் கொண்டாடிவிடப்போவது ஒன்றுமில்லை!

தைத் தாமரை மலரை நேரிற் காணாது சித்திரத்தில் மட்டும் காணும் அனுபவ மற்றவனொருவன் பெற முடிகிறதில்லை. உணர்ச்சியின் அலைகள் அவன் உள்ளத்தே வீசப்பெறுவதுமில்லை. ஆகவே, குறித்த ஒரு விஷயத்தில் தானே பட்டுணர்ந்ததான அநுபவமின்றி ஒரு கற்பனையை நோக்கி அறியும் அறிவிலும், தானே ஒரு முறை சொந்தத்தில் அனுபவித்தறிந்து, அதனையே மற்றோரிடத்தில் கதையாகவோ, கதையினூடே ஒரு கற்பனையாகவோ, பிரத்தியக்ஷத்தில் காணும் காட்சியாகவோ அறியும் அறிவு விசேஷித்தசுவைமிகுந்த உணர்ச்சியினது அலைகள் நிரம்பப்பெற்றதாய் ஜொலிக்கும். அநுபவமற்ற முன்னைய அறிவிலும், இந்த அநுபவ அறிவு விஷயங்களை உடனே கிரகிப்பதுடன், அதில் பூர்ணமான தெளிவும் ருசிகரமும் கண்டு குதூகலப் படுகின்றது. இவ்வித பக்குவம் அற்றவர்களுக்கு ஒரு விஷயத்தை எவ்வளவுதான் தெளிவாக எடுத்துக் காட்டினாலும் விளங்காது. அவர்கள் படித்த அளவோடு அவ்வளவிலேயே தான் நிற்பார்களே தவிர, அதற்கு மேல் சிந்திக்கவோ, மேன்மேலும் விருத்தியாகி உயரவோ அவர்களுக்குப் புத்திபோதாது. ஆகவே, ஒரு விஷயத்தை அநுபவ அறிவுடன் உணர்வதே சிலாக்கியம் என்றார். இத்துடன் நமதுகடையும் கலந்தது.




## உன் வீட்டை—கடையைத் தபாற்சாலையாக்கு.

உன் கடையில் வியாபாரம் பெருகுவதற்கு நாலு பேர் வரப்போக வழி செய். உன் வீட்டை யாவரும் அறியும்படி செய். இதற்கு சுலப வழி மூன்று ரூபாய்க்கு கார்டு, கவர், அரையணா ஒரு அணா ஸ்டாம்பு வாங்கி வைத்து, "தபால் ஸ்டாம்புகள், கார்டு, கவர் இங்கு விற்கப்படும்; ஆனால் கடனுக்கல்ல" என்று ஒரு விளம்பரப் பலகை போட்டு விடு. அதை வாங்கப் பலர் கூடுவதில், அப்படியே சாமான்களும் உன்னிடமே வாங்கிச் செல்வர். வீடும் சீக்கிரம் நாலு பேருக்குப் பிரஸித்தியாவதாய் இருக்கும். இது ஒரு தந்திரம்.

# மூளைக்கு வேலை.

## I

## விடுகதை வினு?

1. ஐந்து எழுத்தில் ஓர் சொல். முதலிலுள்ள இரண்டெழுத்தும் கடைசி எழுத்தும் சேர்க்கில் சமைத்தலாகும்.
2. ஒன்றும் மூன்றும் ஐந்துமான எழுத்துக்கள் சேரில் தீவினையாகும்.
3. ஒன்றும் நான்கும் ஐந்துமான எழுத்துக்கள் கூடின் திருவடியாகும்.
4. முதலெழுத்தும் கடைசி எழுத்தும் சிரசின் வேதனை போக்கும் ஔஷதமாம்.
5. இரண்டு—நான்கு—ஐந்தாம் எழுத்தும் கலந்தால் சென்ற தூரத்தைக் குறிக்கும்.
6. மூன்று—நான்கு—ஐந்தாம் எழுத்தும் கோலையாகும்.
7. ஐந்து எழுத்தும் ஒன்று சேரில் அரியதொரு கிரந்தமாகும்.

மரந்நை—சா. கிருஷ்ணய்யர்.

☞ இதன் விடையை அடுத்த பத்திரிகையில் காண்க.

## II

## எழுத்துமாற்றுச் சொற்கள்.

1. கி ர ன ம் கோ ா ஸ கா ல
2. ஞ வ மி தே ட ன் ம ர்
3. ர ா ரி ச டி வு மு டை ர ன ம ம
4. தா த நா ர ா ன் சீ ம
5. ம் க ய த ப நா ங் ச ன்.

☞ இதற்கு விடை அடுத்த பத்திரிகையில் வெளிவரும்.

## III

சித்திரைமாத ஸஞ்சிகையில் 14-ம் பக்கம் வெளிவந்த விடுகதை வினுவுக்கு "பாரதம்" என்பது விடையாகும்.

---

மனைவியின் பதில் :—

கணவன் :—ஏண்டி இந்த நீலி அழுகை? அப்படி என்ன உன்னை நான் அடித்துவிட்டது? நீ குழந்தைகளை அடிக்கிறதற்கு மேலா அடித்தேன்?

மனைவி :—என்னுடைய அன்பான பெற்றோர்கள் என்னைச் சீராட்டிப் பாராட்டினது என்ன? இப்போது நான் உங்களிடம் வாங்குகின்ற உதையும் குத்தும் என்ன? என் தாய், என் ஆசைத் தாய், என்னை விரும்பின தாய், என் பெயரைச் சொல்லுவதிலேயே ஒரு அழகை உண்டுபண்ணின தாய், என்னுடைய பெரிய பெரிய தப்பிதங்களையெல்லாம் சிறிதாக எண்ணின தாய் வியாதிப் படுக்கையி லிருக்கிறாளென்று கேட்டு, அந்த அருமைத் தாயைப் பார்க்கப்போகவேண்டுமென்று சொன்னால், அதற்கு இவ்விதம் காலால் கையால் பேசலாமா? ஒரு பிராணன் தன் கூடு விட்டுப்போக வெகு நாழிகை செல்லுமா? எனக்குப் பின் வருகிறவளாவது ஸந்தோஷமா யிருக்கட்டும்.




## அக்பர் சமஸ்தானத்தின் உன்னதம்.

### 1



சற்றேறக்குறைய முன்னூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பு இந்திய நாட்டின் வடபாகத்தை மொகலாய பிரபுக்கள் அரசாண்டு வந்தார்களென்பது யாவருக்கும் தெரியும். அப்படி டில்லிப் பட்டணத்தை ராஜதானியாகக் கொண்டு அரசாட்சி புரிந்துவந்த மொகலாய மன்னர்களுள் **அக்பர் பாதுஷா** மிக மேன்மையும் கீர்த்தியும் பெற்றவர். உலகத்திலுள்ள பற்பல தேசங்களை ஆதிமுதல் அநேக அரசர்கள் ஆண்டுவந்தார்கள். அவர்களுக்குளெல்லாம் ஜனங்களுடைய சௌக்கியத்துக்குப் பாடுபட்டுச் செங்கோல் செலுத்தினவர்கள் இத்தனை பேரென்று விரல் மடக்கிச் சொல்லலாம். அவர்களைத் தவிர, மற்ற அரசர்களைப்பற்றிச் சிறப்பாகப் பேச இடமில்லை. அப்படிப் பிரஸித்தி பெற்ற அரசர்களுள் அக்பர் பாதுஷா என்பவரும் ஒருவர்.

***

அக்பர் பாதுஷாவினுடைய சமஸ்தானத்துக்குச் சமானமாகச் சொல்லுவதற்கு முன்னும் இல்லை பின்னும் இல்லை. அது ஒப்புயர்வு இல்லாதது. அவருடைய சமஸ்தானத்திலிருந்த இரத்தினங்களும், பொன் வெள்ளியும் வேறு எந்த இடத்திலும் இருந்ததில்லை. அவைகளின் விலையை இன்னதென்று ஒருவரும் மதிக்க முடியாது. அவருக்கு முன் இந்திய நாட்டை ஆண்ட சக்ரவர்த்திகளொருவரிடத்திலும் அவ்வளவு திரவியம் இருந்ததில்லை. அக்பர் பாதுஷாவானவர் **வெள்ளிக்கிழமையும் ஞாயிற்றுக்கிழமையும் மாமிஸ போஜனம்** செய்கிறதில்லை. மற்ற தினங்களிலும் பால், மோர், தயிர், சாதம் இவைகளைத்தான் விசேஷமாக உண்பார். ஆயினும், **எந்த வேளையிலும் நூறு பேருக்குக் குறையாமல் சாதமும் கறியும் சமைத்து வைத்திருப்பார்கள்.**

***

அவருக்குக் குடிகள் வருஷந்தோறும் செலுத்திவந்த இறை முப்பது கோடி ரூபாய். அவருக்குச் சொந்தமான ஜாகீரிலும் மற்றவைகளிலுமிருந்து வந்த வரும்படி இருபது கோடி ரூபாய். அவரிடத்திலிருந்த குதிரை வீரர்கள் மூன்று லக்ஷம் பேர். காலாட்களும் அவ்வளவே. சண்டை செய்வதற்குப் பழகியிருந்த யானைகள் ஆயிரமாகும். இந்தச் சேனை எக்காலத்திலும் அவருடைய ராஜ்யத்திலிருந்தது. சண்

டைக் காலத்திலோ வென்றால் போர்ச்சேவகர்களின் எண்ணிக்கை அளவிடவொண்ணாது. இப்பெரிய சேனையின் பயத்தினாலேயே அக்பர் பாதுஷாவுக்குக் கீழ்ப்பட்ட பிரபுக்களெல்லாம் அடங்கியிருந்தார்கள். வேறு தேசத்து வேந்தர்கள் அவருடைய சிநேகத்தைப் பாராட்டி மதிப்புடன் கௌரவித்தனர்.

***

அவருடைய சமஸ்தானம் மிகவும் மகிமை பொருந்தியது. அக்காலத்தில் விசேஷ நாகரீகமாகவும் இருந்தது. மோகல்ஜாதியா ரெல்லோரும் பெருமையையும் கீர்த்தியையும் நாடியவர்கள். டில்லிப் பட்டணத்தில் வாசம் செய்த பிரபுக்களெல்லாம் கோடீசுவரர்கள். அவர்கள் தரித்த ரத்தினாபரணங்களையும் சித்திரப்பூம் பட்டாடைகளையும் விலை மதிக்கக் கூடாது. அவர்களில் ஒவ்வொருவருக்கும் வேலையாட்கள் குறைந்தது ஆயிரம் பேர் இருக்கும். இவ்வளவு செல்வத்திற்கும் அவர்கள் உண்டு உடுத்துக் கழித்தவைகள் யாவும் இந்திய நாட்டின் பொருள்களே; இந்தியாவில் தயாரித்த உடைகளே; இங்கு செய்த ஆபரணங்களே. ஒரு காசுகூட வெளிநாட்டுக்குச் செல்லவில்லை. அன்னோரின் திரவிய வைபோகமெல்லாம் இத்தேசத்திலேயே அடங்கி, இவ்விடமே செலவிடப்பட்டு, இந்நாட்டவர்க்கே பயன் படுவதாயின. இப்போதோ?—இந்த இருபதாம் நூற்றாண்டிலோ?

***

பிரபுக்களெல்லோரும் தரித்திருந்த வஸ்திராபரணங்களின் காட்சியைப் பார்க்கும்பொழுது டில்லிப் பட்டணத்தில் அநேக சக்ரவர்த்திகள் வந்து கூடியிருப்பதாகத் தோன்றுமேயன்றி, ஒரே அரசன் வாசம் செய்கிறதாகத் தோன்றாது. அக்பர் பாதுஷாவும் அவருடைய ராஜ்யத்திலிருந்த பிரபுக்களும் வித்துவான்களைப் பரிபாலித்து வந்தார்கள். அக்காலத்தில் கல்விக்கு இருந்த பெருமையும் சிறப்பும் எக்காலத்திலும் இருந்ததில்லை. அவர்களுடைய உதார குணத்தைக் கண்டு வெளித்தேசங்களிலிருந்து அநேக வித்துவான்கள் டில்லிப் பட்டணத்துக்கு வந்து வாழ்ந்திருந்தார்கள். அந்த சமஸ்தானத்துக்கு வித்துவான்களால் உண்டாகிய கீர்த்தியும் சிறப்பும் எழுதிமுடியா. டில்லிப்பட்டணத்தின் பெருமை வரவர விருத்தியடைந்து உலகமெங்கும் பரவிற்று.

***

அக்பர் பாதுஷாவுக்கு முன்பு இந்தியநாட்டை யாண்ட மொகலாய அரசர்கள் வெளித்தேசங்களிலிருந்து குடியேறியவர்கள். இந்து தேசத்து அரசரோடு போர் செய்து அவர்களை ஜெயித்து டில்லி நகரத்தைக் கைப்பற்றினர். அவர்கள் செய்த யுத்தங்களால் இத்தேசத்துக்கு எண்ணிலா நஷ்டங்கள் விளைந்தன. அக்பர் பாதுஷாவோ அப்படியல்ல; டில்லி ராஜ்யம் அவருக்குப் பிதுரார்ஜிதமாகக் கிடைத்தது. ஆதலால் யுத்தம் தொடுப்பதற்கு அவருக்கு யாதொரு காரணமுமில்லை. **தேசத்தினுடைய சௌக்கியத்தின் பொருட்டே தன்னுடைய காலத்தைக் கழித்தார்.** டில்லி ராஜ்யம் அவரது முன்னோர் காலத்தில் கைப்பற்றியதாயினும், சிற்றரசர்களுக்கு மொகலாயர் பேரிலிருந்த மனவருத்தம் முழுதும் நீங்கவில்லை. அப்படியிருந்தும் யாவரும் அக்பர் பாதுஷாவினுடைய அரசாட்சியை விரும்பினார்கள்.

---

குழந்தைக்கிடும் முத்தம் பலருக்கும் மத்தியிலே. பர்த்தாவுக்கு இடும் முத்தம் பரமாத்மாவின் முன்னிலையிலே.

அவருடைய ஆளுகையில் பக்ஷபாதமென்பது எத்துணையும் கிடையாது. அவருடைய சொந்த மனுஷ்யரா யிருந்தபோதிலும் நியாயப்படி நடப்பதே தவிர பிசகுவதில்லை. ஜாதி மதாபிமானங்களுக்கு அவர் இடம் கொடுக்கிறதில்லை. அவருக்குக் கீழ்ப்பட்ட மாகாணங்களுக்குக் கவர்னர்களை ஏற்படுத்தும்போது அவர்களுடைய ஜாதியைக் கவனிக்கிறதில்லை. ஜனங்களுக்குச் சௌக்கியமும், தமக்குக் கீர்த்தியும் உண்டாக்கத்தகுந்த பிரபுக்களையே தெரிந்தெடுத்து அவர்களைக் கவர்னர் வேலைக்கு நியமிப்பார். ஜனங்களுடைய க்ஷேமத்தை யோசிப்பதேயன்றி, தனியான மனுஷ்யருடைய சொந்த விருத்தியைப்பற்றி யோசிப்பதில்லை. அவருடைய காலத்தில் ஜனங்களுடைய பணத்தைக் கொள்ளையடித்து ஐசுவரியவான்களாக ஒருவரும் ஆனதில்லை. கவர்னர்களை ஏற்படுத்துவதைப் பார்க்கிலும், அவர்களை நடத்துவதில் அவருடைய சாமர்த்தியம் விசேஷமாகத் தோன்றும். அவர்களை நியமித்த பின்பு வெகு ஜாக்கிரதையாக அவர்களுடைய செய்கைகளைப் பார்த்துவருவார். அவர்கள் ஒவ்வொரு விஷயத்துக்கும் திருப்தியான கணக்கு அனுப்ப வேண்டியதா யிருந்தது. கீழதிகாரிகள் அசக்தர்களாயாவது சாமர்த்தியமற்றவர்களாகவாவது இருந்தால் அதைப்பற்றி அவர் கவனிக்காமல் இருக்க மாட்டார்.

***

வேனிற் காலத்தில் யமுனு நதி வற்றிப்போவதால், அதன்வழியாகப் பிரயாணம் செய்வதற்காவது வர்த்தகம் செய்வதற்காவது சரிப்படாது. அது கண்டு டில்லிப் பட்டணத்தை விட்டு ஆக்கிரா நகரத்தை ராஜதானியாக்கினர். அந்தப் பட்டணம் என்றைக்கும் நதியில் ஜலம் எப்போதும் தட்டாமல் இருந்துகொண்டிருக்கும். வேனிற் காலத்தில் யமுனு நதியின் பாய்ச்சலில் ஏறக்குறைய நூற்றைம்பது ஏகரா நிலம் சாகுபடியாகும். தோட்டப் பயிர்கள் அதில் நன்ருக விளையும்.

***

ஆக்கிரா நகரம் மகம்மதியா காலத்துக்கு முன்னதாகவே பெயர் பெற்றிருந்தது. அதன் பெருமையைக் குஜினி நகரத்துக் கவிஞர்கள் கொண்டாடி யிருக்கிருர்கள். மொகலாயர் காலத்தில் அதைப்போல் சிறப்புற்ருேங்கிய நகரம் வேறென்றும் இல்லையென்றும் ஜிஹாங்கிர் என்னும் மன்னர் சொல்லியிருக்கிருர். அதில் இருக்கிற பெரிய கோவில் அக்பர் பாதுஷாவினுல் கட்டப்பட்டது. அது 1563-ம் வருஷம் ஆரம்பமாகி நாலு வருஷத்தில் கட்டிமுடிந்தது. அது ஒரு மைல் சுற்றளவுள்ளது. அக்கோவிலைக் கட்டிய கற்கள் எகிப்து தேசத்துக் கோரிகளில் இருக்கிற கற்களைப்போல் பெரியவைகளாக இருக்கும். இது தவிர, பேபர் அரசரால் வளைக்கப்பட்ட சிங்கார வனம் ஒன்றிருக்கின்றது. அதில் ரோஜா புஷ்பத்தின் மணம் மிக விசேஷமா யிருக்கும். அக்பர் பாதுஷாவானவர் ஆக்கிரா நகரத்தை அலங்காரம் செய்ததுபோலவே அவருடைய ராஜ்யத்திலிருந்த சிற்றரசர்களும் அவரவர்களுடைய பட்டணங்களை அலங்காரம் செய்தார்கள். ஆக்கிரா நகரத்தில் வியாபாரம் விஸ்தாரமாக நடந்து வந்தது. மழையில்லாக் காலத்தில் சற்றேறக்குறைய எழெட்டு மாதம் வரைக்கும் காபூல் முதலான தேசங்களிலிருந்து அனுதினமும் எண்ணுயிரம் குதிரைகள் ஆக்கிரா பட்டணத்துக்கு வரும். ஒரு தினத்துக்குள்ளாக அந்தக் குதிரைகளெல்லாம் விலையாகி விடும். மறுநாளைக்கு ஒன்றும் விலைக்கு அகப்படாது. இவ்வாருக ஜிஹாங்கிர் அரசர் சொல்லியிருக்கிருர்.

(தொடரும்.)




## எதிர்நிலே மொழிகள்

| | | | |
|---|---|---|---|
| மகிழ்-ச்சி | விச-னம் | மேன்-மை | தாழ்-மை |
| மென்-மை | திண்-மை | வெம்-மை | தண்-மை |
| வாலி-பம் | விருத்-தாப்-பி[யம் | வெளிச்-சம் | இ-ருள் |

## ஒன்றுக்கொன்று உரித்தான சொற்கள்.

| | | | |
|---|---|---|---|
| அத்-திரம் | சத்-திரம் | தந்தை | தாய் |
| அர-சன் | ஆளு-கை | நல்-வினை | தீ-வினை |
| இம்-மை | மறு-மை | நற்-கந்-தம் | துர்க்-கந்-தம் |
| இல்-லறம் | துற-வறம் | நி-யாய-வாதி | வழக்-காளி |
| ஆ-சிரி-யர் | மாணக்-கன் | பசி | தாகம் |
| உப்-பு | புளிப்-பு | பாரதம் | பாக-வதம் |
| உயர்-திணை | அஃ-றிணை | புரு-ஷன் | தாரம் |
| உயிர் | மெய் | பூமி | நீர் |
| எஜ-மானன் | ஊழி-யன் | அக்-கா | தம்பி |
| கல்வி | செல்-வம் | பெற்-றோர் | குழந்-தை |
| கவி | வச-னம் | மாப்-பிள்ளை | பெண் |
| சதை | இரத்-தம் | மின்-னல் | இடி |
| சரம் | அச-ரம் | முன் | பின் |
| சிரு-ஷ்டி | ஜெந்து | வருத்-தல் | வேவித்-தல் |
| சீ-வான்-மா | பர-மான்-மா | வாதி | பிரதி-வாதி |
| சுதே-சன் | அன்-னி-யன் | வா-னம் | பூமி |
| சூரி-யன் | சந்-திரன் | வினு | விடை |

**தையலே உலகம் கண்ணுடி.**

(தொடரும்.)

## சிறுமணித்திரள்

(3-வது கமலம் 667-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ஸ்ரீ ஜேம்ஸ் ஆலனின் அமுத மொழிகள்.

**547.** ஒருவனிடமுள்ள பொருள் அவனிடமிருந்து போய்விட்ட காலத்தில் அவனுடைய கவலையும், கிலேசமும், அவைகளைத் திரும்பக் கொண்டு வராது. ஆனால்—அவனுடைய தீவிர முயற்சி அதனைத் திரும்பக் கொண்டு வரும்.

**548.** நீங்கள் ஒரு கொடுமையான எஜமானனிடத்தில் வேலை பார்க்கும்போது நீங்கள் கொடுமையாக நடத்தப்பட்டாலும், நீங்கள் அவரிடம் அன்பையும், பொறுமையையும் காட்டுங்கள். அது உங்கள் எஜமானர்களுக்கு புத்தி கற்பிப்பதாகும்.

**549.** பிரபுக்கள் உங்களை இம்சிக்கிறதாகக் குறை கூறுகிறீர்கள். நீங்கள் பணக்காரர்களானால் எளியவர்களை இம்சிக்கமாட்டீர்கள் என்பது நிச்சயமா? இன்று இம்சிக்கிறவன் நாளை இம்சிக்கப்படுவான் என்பது நிச்சயம்.

**550.** ஒழுக்க மில்லாத செல்வவந்தன் உண்மையில் தரித்திரனே. அவன் எவ்வளவு செல்வவந்தனாக இருந்தபோதிலும், அவன் கடுந்துன்பங்களை அனுபவித்தே தீரவேண்டும்.

**551.** நிலையான செல்வத்தையடைந்திருக்க வேண்டுமென்ற ஒருவன் முதலில் ஒழுக்க முடையவனாக இருக்கவேண்டும். அப்படிக்கில்லாது, பொருள் சம்பாதிப்பதே வாழ்க்கையின் முக்கிய நோக்கமென, அதை அடையும் பொருட்டு பேராசையோடு முயற்சிப்பதும் தப்பு. பிரயோஜனமுள்ளதும் பரோபகாரமுமான செயல்களையே வாழ்வின் முக்கிய நோக்கமெனக் கொள்ளவேண்டும்.

**552.** பிறருக்கு நன்மை செய்யும் பொருட்டு, செல்வம் வேண்டுமென்ற உண்மையான நோக்க முடையவர்களுக்கு, செல்வம் வந்துசேரும். அக்காலத்தில்,—அதைநல்வழியில்செலவு செய்யும் பொருட்டு நியமிக்கப்பட்ட நிர்வாகி என்ற நினைப்பை மறந்து விடக்கூடாது.

**553.** உண்மையில் நன்மை செய்ய விரும்புகிற ஹிருதயம் செல்வம் வரும் வரையில் காத்திருக்காது. அது அயலானுக்கும்—சிநேகிதனுக்கும்—பகைவனுக்கும் ஒரே தன்மையாக உபகாரம்செய்யச் செல்கின்றது.

**554.** சூரியன் உதயமானதும் இருள் நீங்குவது போல தூய்மையாலும், தெய்வ நம்பிக்கையாலும் ஏற்பட்ட நல்ல நினைப்பால் தீமையின் சக்திகள் ஓடுகின்றன.

**555.** நன்மை வடிவாயிருக்கிற கடவுளுக்குச் சரியாக எவர் தமது அகத்தை நல்லதாக்க தினமும் முயற்

---

ஒருவர் ஒரு வேலைக்கு வண்டிச் செலவு தந்து அனுப்பினால், அந்த வழியிலேயே தனக்கு ஆகவேண்டிய வேலைகளையும் பார்த்துக்கொண்டு வந்து விடுகிறார்கள் சில சமர்த்தர்கள்.

சிக்கின்றனரோ, அவர்கள் உண்மையில், மெய்யான ஆரோக்கியத்தையும், செல்வத்தையும், சுகத்தையும் அடைகின்றனர்.

556. நன்மைக்கு உவமையாகச் சொல்லத்தக்க பொருள்ஒன்றுமில்லை. ஒழுக்க விதிகளுக்கு ஒத்துப் புறத்தில் நடப்பதை மாத்திரம் நன்மையென்று சொல்ல முடியாது. தூயநினைப்பு, உயர்ந்த கோரிக்கை, சுயநலமற்ற அன்பு, வீண்பெருமையின்மை முதலியவற்றை அகத்திலுங் கொள்வதே நன்மை யென்று சொல்லலாம்.

557. நீங்கள் செய்யும் வேலை எதுவாயிருந்தாலும் அதில் உங்கள் முழுமனதையும் செலுத்துங்கள், ஊக்கத்தை விடாது சிறிய வேலைகளைக் குறையறச்செய்து முடிப்பவர்களுக்கு,பெரியவேலைகள்நிச்சயமாய்க் கைகூடும்.

ஒரு நாடகத்தில் நடிப்பவர் தான் வேஷ்தாரி என்பதையே மறந்து நடித்தால் தான் சுவை அதிகப்படுகிறது. அவ்விதமே நாவலாசிரியரும் தமது கதா பாத்திரங்களில் தாமே புகுந்துகொண்டு அப்படியப்படியே இயற்கையை நூலில் வாரிக் கொட்டுகையில் அது மேலாகிய கற்பனையும் ருசிகரமும் கொண்டு விடுகிறது. அவ்விதமே ஆசீர்வதிப்போரும் அன்புடன் தேவ உருவில் நின்று மங்களமான நல்மொழி கூறினால் தான் அந்த ஆசியும்பலிக்கின்றது.

558. எவன் தன்னை அடக்கி ஆளுகின்றானோ, அவன்தான் மற்றவரை அடக்கி ஆளுவதற்குத் தகுதியுள்ளவன். வெறியர்களும், பயங்காளிகளும், ஆலோசனை இல்லாதவர்களும், அற்பத்தன்மை யுள்ளவர்களும், தத்தம், இனத்தோடு கூடி நிற்காவிட்டால் துணையின்றி அழிந்து போவார்கள்.

559. "யான்" என்பதைப் பற்றுங்கால் நீங்கள் துன்பத்தைப் பற்றுகின்றீர்கள். "யான்" என்பதை விடுங்கால் நீங்கள் இன்பத்தை அடைகின்றீர்கள். சுயநய நாட்டம் இன்பத்தை இழக்கும்படி செய்யும்.

560. நன்மை என்று சொல்லப்படும் குணங்களை எல்லாம் ஒருவன் கைக்கொண்டிருந்தால்,அது அவனைத் தீமையின் சகல சக்திகளினின்றும், ஒவ்வோர் ஆபத்தினின்றும் காப்பாற்றும்.

561. உண்மையான பலத்தையும் நிலையான சாந்தியையும் அடைய வேண்டினால், தன்னை அடக்குதலையும், தன்னை ஆள்தலையும், தன்னைச் சுத்தப்படுத்துதலையும் தவிர வேறு மார்க்கமே யில்லை.

562. எவ்விடத்தில் அச்சமும், தொல்லையும்,கவலையும், ஐயமும், எரிச்சலும், இருக்கின்றனவோ, அவ்விடத்தில் நம்பிக்கையின்மையும், அஞ்ஞானமும் நிறைந்திருக்கும்.

563. நியாயமென்று நீங்கள் நம்புகிற காரியத்தையே சகல சந்தர்ப்பங்களிலும் செய்யுங்கள்.

(தொடரும்.)

கா. அல்லாபிச்சை.

# சென்றுபோன நாட்கள்

## ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதி.

(61-ம் பக்கத் தொடர்ச்சி.)



சென்னைக்கு வந்த பின்பு பாரதியார் "சுதேசமித்திரன்" பத்திரிகையின் உதவி ஆசிரியராய் விளங்கினர். அவரது துள்ளிக் குதிக்கும் நடையைக் காண்பவர்கள் ஓ! இது பாரதி எழுதியது என்று தெரிந்துகொள்ளாமற் போகார்.

***

காதல் முறையில் நவீனமாகக் கவிதைகள் இயற்ற வேண்டுமென்றும், 'பச்சை பச்சையாக' எழுதும் வழக்கம் தவிர்க்கப்படவேண்டு மென்றும், தெரிவித்து அதற்கு உதாரணமாக "வள்ளிப் பாட்டு" என்ற சிங்கார ரஸ கீர்த்தனையை 1920-ம் வருஷ "மித்திர"னின் அனுபந்தத்தில் வெளியிட்டார். இன்னும் அநேக பாடல்கள் இயற்றி வைத்திருப்பதாகவும் அதன் முகவுரையில் கூறியிருந்தார். இனியும் இயற்றலாம் என்று எவ்வளவோ கருதியிருக்கலாம்.

***

புதிய உருவில் வங்காளி போன்றும், ஒரு யுத்த வீரன் போன்றும் சென்னையில் விளங்கிய பாரதியாரை ஒரு தினம் "சுதேசமித்திரன்" காரியாலயத்தில் மாலைப்பொழுதில் உட்காரவைத்துப் பாடும்படி நாமும் இன்னும் சிலரும் கேட்டுக்கொண்டோம். ஆ! அப்பொழுது அவர் தம்மையே மறந்து பாடிய இன்ப ரஸத்தை நேரிலிருந்து அனுபவித்தவர்களே உணர வல்லார். அவர் நம்மோடு திருவல்லிக்கேணிக் கடற்கரையில் பழய நாட்களில் (1907-ம் ஸூல்) எத்தனையோ பாடல்களைப் பாடி யிருக்கின்றார். அவர் பாடுகையில் அந்தப் பாட்டின் அத்தனை ரஸங்களும் அவரது வதனத்தில் தத்ரூபமாய்த் தோன்றி ஜ்வலிக்கும்.

பாரதியார் எவ்வளவோ காலம் வாழப்போவதாக எண்ணியிருந்தார். எவ்வளவோ வேலைகள் செய்ய நினைத்திருந்தார். ஒரு வாரப் பத்திரிகை தொடங்க வேண்டுமென்று நம்மிடம் தர்க்கித்தார். பழய "இந்தியா"வின் காரமான நடை கூடாதென்று நாம் சொன்னதையும் ஒப்புக்கொண்டார். 1920-ம் வருஷத்து "சுதேசமித்திரன்" அநுபந்தத்தில் நல்ல வேலை செய்தார். 1921-ம் வருஷ "மித்திரன்" அநுபந்தத்திற்கு அவர் இல்லாமற் போய்விட்டார். அவர் வாழ்த்திச் சென்ற தமிழ் நாட்டில் ஸமீபத்தில் அவரது கீதங்களை அரசாங்கத்தினர் தடுத்துவிட்ட "திருவிழா"வும் நடந்தது. நற்காலமாய் அந்தத் தடை நிவர்த்திக்கப்பட்டது தமிழகத்தின் பாக்கியமே. பாரதியார் 1907-ம் வருஷத்தில் தமது நண்பரொருவர் மரித்ததற்காக இரங்கிச் சில பாடல்கள் புனைந்தார். அச்சமயம் நாமும் அருகிலிருந்தோம். அவற்றின் இரண்டு அடிகளை இப்பொழுது பாரதியாருக்கே உபயோகித்து இவ் வியாசத்தை முடிக்கின்றோம்.

அந்தோ! மறலிநம்
அமுதினைக் கவர்ந்தான்
நொந்தோ டயனிலை
நுவல யாதுளதே!

முற்றிற்று.




1. **கைமாற்றுக் கடன்** :—வீட்டுச் செலவுகளுக்கு வைத்திருப்பதில் 'இதோ தருகிறேன்' என்று வாங்கிப்போவோர் அந்தச் சொற்படியே பணத்தைக் கொடுப்பதில்லை. கேட்கப்போனாலோ 'நான் உன் பணத்தை எடுத்துக்கொள்ளுவேனென்று நினைத்துக்கொண்டாயா? நாங்கள் அத்தனைக்கு மதிப்பில்லையா' வென்று பேச்சு உண்டாகிறது. நாம் செலவுக்கில்லையே யென்று கேட்கிறோமென்பதை எவ்வளவுதான் சொன்னாலும் உணருகிறதில்லை. அவர்கள் பேச்சே அவர்களுக்குப் பெரிதாய்விடுகிறது. பணத்தைக் கொடுத்து வாங்கும் பொல்லாப்பு இது. இப்படி நேரிடுமென்று தெரிந்தும் கடன் கொடுக்காமலிருக்கவும் முடிகிறதில்லை. எப்படியும் தொல்லைதான்.

2. **தன் பணம்** :—பிறர் தேடிய சொத்தை அழிக்கிறவர்களுக்குப் பொருளின் அருமை தெரிகிறதில்லை. எல்லாம் அழிந்து, தானே சம்பாதித்துத் தன் தன் வயிற்றைக் கழுவநேரிடும் காலத்தில்தான் ஒரு பைசாவானாலும் ஒன்பது முடி முடித்துப் போட்டுக் காப்பாற்றும் புத்தி வருகிறது.

3. **கடன்** :—கடன் வாங்கிக் கடைவைத்து லாபம் சம்பாதிக்கலாமென்பது கனவாய்விடுகிறது. அதனிலும் எற்கனவே தான் உள்ள தொழிலிலேயே சொற்ப ஊதியத்தைத் தேடி வயிறு வளர்த்துத் திருப்திப்படுவது வெகு சிலாக்கியம்.

4. **சிலர் துணிவு** :—மானஸ்தன் கடன் வாங்கிவிட்டால் கொடுக்க வேண்டியதற்காக எவ்வளவோ கஷ்டப்படுகிறான். கடன் தீருகிறவரையிலும் எங்கி யேங்கி இளைத்துவிடுகிறான். சிலரோ வேண்டிய மட்டும் எல்லோரிடத்திலும் கடன் வாங்கிக்கொண்டு—'வந்து பார்'—என்று வடக்கு திசையைக் காண்பிக்கிறார்கள். 'வாங்குகிற வழியாக வாங்கிக்கொள்' என்று மீசையை முறுக்குகிறார்கள். இத்தகையோருக்கு தான் பணக்காரர்களும் சீக்கிரம் கடன் கொடுக்கிறார்கள்.

5. **இந்தக் காலம்** :—தகப்பன் பிள்ளைகளுக்குச் செல்வம், புகழ், அறிவு இவைகளைச் சம்பாதித்து வைக்காவிடினும் கடன், வியாஜ்யம், கெட்ட பேர், சோம்பேரித்தனம் முதலியவைகளை வைத்துவிட்டுச் சாகிறார்கள். இது இக்காலத்தில் அதிகம்.

6. **ஊழியர்கள்** :—சின்னஞ் சிறு கண்ணாட்டியான யௌவனப் பெண்டாட்டிகள் எத்துணைக் குற்றம் செய்திடினும், என்னபேசிடினும் நொந்து வெறுத்திட மனம் வராமல் அவள் திட்டுகளை யெல்லாம் செவியாரப் பருகி மனம் களிக்கிறார்கள். யார்? கிழட்டுக்குமார புருஷர்கள். இவர்கள் தங்கள் மனைவிகளுக்கு ஊழியனாய்—தாசானுதாசனாய் நடந்து கொள்ளுகிறதைத் தவிர வேறு எதற்கும் வல்லமையற்றவர்கள்.

---

ஸ்திரீயின் மோகம் பெரிது என்கிறார்கள். அதைவிடத் தீவிர வேகம் கொண்டது உண்மை யன்புள்ள ஒருவனுக்குத் தன்குழந்தைகளின் பாசமாம்!

7. **அதிகரிக்கும்:**—மனம்போன போக்கெல்லாம் போய்த் திரிந்தால் பணம் போகிற போக்கு அதிகரிக்கும். வாய்போன வழியெல்லாம் பேசி ஏசிக்கொண்டிருந்தால் கலகப் போக்கு அதிகரிக்கும். வரவுக்கு மேல் செலவு செய்துகொண்டே போனால் கடன் வாங்குதல் அதிகரிக்கும்—கஷ்டமும் அதிகரிக்கும்.

8. **மன இச்சை:**—பிடிக்காது என்று தள்ளிய பதார்த்தத்தின்பேரில் பிணியாளி ஆசைப்படுகிறான். வைத்தியர் எது பத்தியம்—ஆகாது என்று சொல்லுகிறாரோ அதில்தான் அவனுக்கு அவாவுண்டாகிறது. கொஞ்சம் போல் தின்றால் தேவலாமென்று எண்ணுகிறான். கிட்டாததில் தான் மனந்தாவுதல் சகஜம். அந்நிய சுந்தரிகளிடத்துத்தான் அதிக கண் போகிறது. தன் மனைவியிடத்து ஒரு காமமும் இல்லை. காமப் பார்வையுமில்லை. என்றும் அழியாத காதல் மட்டும் நெடுக அங்கு உண்டு.

9. **பணம் செய்யும் வேலை:**—கையில் பணமிருந்து கண்மூடித்தனமாய்—டம்பாச்சாரியாய் செலவு செய்கிறவரையிலும் அவனைச் சுற்றிக்கொண்டு, அவன் எச்சில் துப்பவேண்டுமானாலும் 'என் கையில் துப்பு ஏன் அவ்வளவுதூரம் நடக்கிறாய்?' என்று தலையில் தூக்கிக்கொண்டு திரியும் சுயநல சோம்பேறிகள் அவன் கைவரண்ட தக்ஷணம் பாபராய்விட்டானென்று பறந்துவிடுகிறார்கள். இப்பொழுது இவன் அட்டகாசம் அதிகாரமெல்லாம் எங்கே?

10. **பிறர் மனம்:**—நம் சக்திக்கேற்ற ஒரு பொருளைக் கொடுத்தால் பெற்றுக்கொள்ளுகிறவர்கள் மன அதிர்ப்திப்படுவதோடு 'இந்த அற்ப சாமானைக் கொடுத்து என்னைக் கேவலம் செய்ய நினைத்துவிட்டான் போலிருக்கிறது; அத்தனைக்கு நாங்கள் தாழ்ந்தா போய்விட்டோம்' என்று பிரமாதமாய்க் கோபித்து வீசி எறிந்துவிட்டுப் போய்விடுகிறார்கள். நமது நிலைமையையும் தவிப்பையும் இவர்கள் உணர்வதேது?

T. S. குழந்தைவேல் முதலியார்.

## சிறிய உதவிகளினின்றும் பெரிய சக்தி.

களைத்து நமது தெருவாயிலில் வந்து உட்கார்ந்த அன்னியருக்கு, 'தாகத்திற்கு ஏதாவது சாப்பிடுகிறீர்களா' என்று அன்புடன் விசாரித்தால், உடனே அந்த அன்னியரின் களைப்பு தீர்ந்து அன்பின் சக்தி தோன்றிவிடும். கணவனார் ஸ்நானம் செய்ததும் உடனே துடைத்துக் கொள்ளத் துண்டுடன் நின்றிருந்து தந்தால், அவர் நெற்றிக்குத் திலகமிட்டுக் கொள்ள கண்ணாடி ஜலம் யாவும் சித்தமாய் எடுத்து வைத்தால், அதனால் எவ்வளவோ களைப்பு நீங்கி அவருக்குப் புதிய பலம் உண்டாகிவிடும். கஷ்டமில்லாத சிறிய உதவிகளைச் செய்து எவ்வளவோ பெரிய சக்திகளை எழுப்பிவிடலாம். செய்.




(50-ம் பக்கத் தொடர்ச்சி.)

## Letter XVII.

Beyond this termination of our corporal existence, we are therefore obliged to extend our hopes, and every man indulges his imagination with something which is not to happen till he has lost the power of perceiving it. Some amuse themselves with entails and settlements, provide for the inerease and perpetnation of families and honours, and contrive to obviate the dissipation of fortunes, which it has been the whole business of their lives to accumulate. Others, more refined and exalted, congratulate their own hearts upon the future exfent of their reputation, the lasting fame ot their performances, the reverence of distant nations, and the gratitude of unprejudiced posterity.

It is not, therefore, from this world, that any ray of comfort can proceed to cheer the gloom of the last hour. But futurity has still it sprospects; there is yet happiness in reserve sufficient to support us under every afiliction. Hope is the chief blessing of man, and that hope only is rational, which we are certain cannot deceive.

I am, sir,

Santhana Krishnan.

## 17-ம் கடிதத் தொடர்ச்சி.

தேகத்தோடு கூடிய உயிர் பிரிந்து விட்ட பின்பும் நிறைவேறும்படி சில ஆசைகளை நாம் கொள்ளுகிறபடியால் அவனவன் தான் இறந்த பின்பு நடக்கவேண்டிய ஒவ்வொரு காரியத்தையும் தன் மனதிலே நினைக்கிறான். சிலர் தங்கள் குடும்பங்களும் கீர்த்திகளும் வளர்ந்து என்றைக்கும் நிலைக்கும்படி தங்கள் ஆஸ்திகளை இன்னாருக்கு இன்னாருக்கென்று எழுதிவைக்கவும், தங்கள் ஆயுசு காலமெல்லாம் பிரயாசைப்பட்டுத் தேடிய அவ்வாஸ்திகள் அழியா திருக்க வழி தேடவும் நினைக்கிறார்கள். தேர்ந்த புத்திமான்களாகிய மற்றோர் தங்களுக்கு இனி உண்டாகப் போகின்ற புகழையும் தாங்கள் செய்த காரியங்களுக்கு என்றும் அழியாதிருக்கப் போகின்ற கீர்த்தியையும் தூரதேசத்தார் சனங்கள் தங்களைக் கொண்டாடப் போகுதலையும், இனிவரப் போகின்ற சந்ததியார் அந்நன்றி பாராட்டப் போகுதலையும் நினைத்து உள்ளத்தில் ஸந்தோஷிக்கிறார்கள்.

ஆகையால் இறக்கும் போது உள்ள விசனத்தைத் தீர்க்கக் கிஞ்சித்தளவாகிலும் ஆற்றல் இவ்வுலகத்தில் உண்டாகுவதில்லை. மறுமையில் அவ்வாற்றலுக்கு இடமுண்டு. அன்றியும் நமது ஸஞ்சலத்தை யெல்லாம் நிவர்த்தி செய்யக் குறைவில்லாத பாக்கியம் அங்குண்டு. அந்த நம்பிக்கை யொன்றே நியாய மானதாம். அது ஒரு நாளும் மோசம் செய்யா தென்னும் நிச்சயம் நமக்கு உண்டு. இங்ஙனம்,

சந்தான கிருஷ்ணன்.

# ரகர—றகர பேதங்கள்.

(36-ம் பக்கத் தொடர்ச்சி.)

74. சிரல்—சிச்சிலிக் குருவி, சிறல்—பகை. (74) சிரல் ஒன்றுக்கொன்று கொத்திக் கொண்ட சிறலால் மிக்க காயம்பட்டு விட்டது.

75. சிரை—குரங்கு, சிறை—காவல் (75) தென்னந் தோப்பை யழிக்கும் சிரையைப் பிடித்துவந்து நம் அரண்மனையில் சிறை வை.

76. சுரை—தேன். சுறை—கொற்றுஞ்செடி. (76) வண்டினம் பருகும் சுரையைப் போல இந்த சுறை சுவை தருமா?

77. சுரோணிதம்—மகளிர் சூதகம். சுறோணிதம்—அனிச்சைமரம். (77) சுரோணிதம் அதிகப்பட்டால் சுறோணிதப்பட்டை யிடித்துச் சாப்பிடக் குணமாகும்.

78. சூரல்—பிரம்பு, சூறல்—தோண்டல். (78) நான் பயிரிட்ட சூரல் எல்லாவற்றையும் எவனோ நேற்றிரவு வேரோடு சூறி நாசம் செய்துவிட்டான்.

79. சூரன்—வீரன், சூறன்—மூஞ்சூறு. (79) சூரனைப் பார்த்து சூறவாகனனாகிய கணபதி வெற்றியுண்டாக வரம் தந்தார்.

80. சூரை—ஓர் செடி, சூறை—கொள்ளை. (80) என் தோட்டத்தில் முளைத்திருந்த சூரைச் செடியெல்லாம் சூறை போய்விட்டது.

81. செரித்தல்—சமித்தல், செறித்தல்—அழித்தல். (81) நோயுடன் இருக்கையில் செரித்தலல்லாத பண்டங்களை யுண்டால் அது சரீரத்தைச் செறித்துவிடும்.

82. செரு—போர், செறு—வயல். (82) ஐதரும் இங்கிலீஷ்காரரும் செரு கலந்ததால் நம்முடைய செறு பாழாய்விட்டது.

83. செருத்தல்—பசுவின் மடி, செறுத்தல்—கொல்லல். (83) பசுவைப் பலியிடக் கொண்டுபோன ஒருவன் அதன் செருத்தலைப் பார்த்து அதிசயித்து இதைச் செறுத்தல் பரிதாபமென்று விட்டுவிட்டான்.

84. செருநர்—படைவீரர், செறுநர்—பகைவர். (84) மைசூரில் செறுநராகிய ஐதராலி திப்பு இவர்கள்பேரில் இங்கிலீசு செருநர் சண்டையிட்டனர்.

85. சேரல்—கிட்டல், சேறல்—நடத்தல். (85) ஐதர் படையைச் சேர இங்கிலீஷ்காரர் எண்ணி கடற்றுறை வழியாய்ச் சேறந்தார்கள்.

86. தரி—தரிப்பு, தறி—கட்டுத்தறி. (86) கட்டுத்தறியால் நில்லாத மதங்கொண்ட யானை ஓரிடத்திலும் தரியாவாம்.

87. தரித்தல்—சுமத்தல், தறித்தல்—வெட்டல். (87) திருடர் நம் எஜமாட்டி தரித்திருந்த பொன்னுபரணத்திற்காக அவரை இராத்திரி தறித்துவிட்டார்கள்.

88. தாரு—மரக்கொம்பு, தாறு—குலை. (88) நம் தோட்டத்திலுள்ள ஆலமரத்தாரில் வாழைத்தாறு ஒன்று கட்டிவைத்திருக்கிறேன். அதைப் போய் அவிழ்த்து வா.

(தொடரும்.)

---

"பிடித்தேனானால் ஒரே வைராக்கியம் தான்; என்னை அசைக்க எவராலும் முடியாது; நான் செய்த உறுதி உறுதியே" என்று காட்டுவோருமுண்டு.




கனம் பத்திராசிரியரவர்கட்கு,

வந்தனம். உபய குசலம். உலகெங்கும் நிகரின்றி நிலவி மக்களின் பகுத்தறிவைப் பிரகாசிக்கச் செய்யும் சீரிய தொண்டினை மேற்கொண்ட தங்கள் "அமிர்த குணபோதினி"யின் அருமை பெருமைகளை அஃது பிறந்த நாள் முதல் அத்துடன் பழகிவரும் நான் நன்கு உணர்ந்திருக்கிறேன்.

"அமிர்த குணபோதினி" என் கல்வியறிவை நன்கு விசிதப்படுத்தி, அரிய கட்டுரைகள் வரையும் ஆற்றலை நல்கியிருக்கிறது.

"அமிர்த குணபோதினி" துளபச் செடிபோன்று பிறக்கும்பொழுதே அமிழ்தினுமினிய—அறிஞரின் அறிவிற்கதீதப்பட்ட பற்பல உயரிய—அனுபவக் கட்டுரைகளைத் தாங்கி நறுமணம் கமழப் பிறந்ததாகலின் அதன் பெருமை அதீதப்பட்டது என்று கூறுவது மிகையாகாது.

தங்கள் அருங்குழவி "அமிர்த குணபோதினி" பல்லாண்டு வாழ்ந்து, பாமரரைப் பாரமார்த்திக வாழ்க்கையில் புகுத்திப் புகழுடன் பிரகாசிக்க எம்பிரான் அருள்புரிவாராக.

ஏ. எஸ். நரஸிம்ஹ ஐயங்கார்.

### நீ கேட்கக்கூடிய உரிமையை மற்றவரிடம் கோடாதே.

வீட்டுச் செலவுக்கு உன் மனைவியிடம் தந்துபோன பணத்துக்கு என்ன செலவு என்று கேட்க உனக்கு மட்டுமே உரிமையுண்டு. "நீ ஊர் போனதும் அவள் தாய்வீட்டில் 2-வாரம் குந்திக்கொண்டு, நீ தந்ததில் அதிகம் செலவிடவேயில்லை; நீ தந்துபோன பணத்துக்கு என்ன கணக்கு என்று கேள்" என்று வீட்டிலிருப்பவர் உனக்குக் கடிதம் எழுதினால் அந்த சங்கதிக்குப் பதில் தராதே. தன் சொந்த கணவனின் பணத்தை எடுத்துக்கொள்ள உன் மனைவிக்கு உரிமையுண்டென்றும், அதற்காக உன்னைத் தவிர மற்றவர்க்குக் கணக்கு சொல்லவேண்டிய அவசியம் அவளுக்கு இல்லை என்றும் எண்ணி, உன்மனைவியை ஒரு மதிப்புடனேயே வை. மற்றவர்க்கு அவளைக் கேவலமாய் அடிமைப்படுத்தாதே. அவள் கேவலப்படுவது உனக்கும் கேவலம். பேத துவேஷ புத்தியுள்ளவரே அவளைக் கணக்கு கேட்கும்படி உனக்குச் சொல்வர். அன்பு நிறைந்தோர் ஒருபோதும் தூண்டிவிடார்; கணவனையும் மனைவியையும் பிரிக்கமாட்டார்.

# சென்றமாதம்

“கேலிப்பும் தோற்பும் ஒருவர் பங்கல்ல” என்பதைத் தென்னிந்திய இருப்புப் பாதை வழக்கு உண்மைப்படுத்திவிட்டது. அதில் தலைவர்களாய்

**தென்னிந்திய ரயில்வே வழக்கு.**

இருந்து ரயில்வேத் தொழிலாளர்கட்கு உதவிசெய்த ஸ்ரீ சிங்காரவேலு செட்டியார், ஸ்ரீ முகுந்தலால் சர்க்கார் முதலிய 15-பேர்களுக்கும் பத்து வருஷ கடின சிக்ஷை திரிச்சி செஷன்ஸ் கோர்ட்டில் விதிக்கப்பட்டது. காட்டுப்பாக்கம் வழக்கிலும் செட்டியார்—சர்க்கார் இவர்களுக்கு 6-மாத சிக்ஷை விதிக்கப்பட்டுள்ளது. மனுஷ்யனுக்குக் கஷ்டகாலம் எந்த சந்து வழியாகவோ வந்துவிடுகிறது! இவர்கள் இவ்விதம் சிக்ஷிக்கப்படுவரென ஆரம்பத்தில் எவராவது எண்ணியதுண்டா?

***

“யானை கட்டத் தானே கயிறு எடுத்துக் கொடுக்கும்” என்பது போல, எத்துணையோ அனுபவமும் திறனும் வாய்ந்த பத்திராசிரியர்களும் தங்களின்

**கல்கத்தா “பார்வர்ட்” பத்திரிகை.**

எழுதுகோலை இழுத்துப் பிடித்து எழுதுவதில் எவ்விதமோ தவறிப் போய் தங்களின் எழுத்தாலேயே தாங்களும் ஆபத்துக்குள்ளாகிறார்கள். அவ்விதமாக, கல்கத்தா ‘பார்வர்ட்’ பத்திரிகையும் ஆபத்தில் சிக்கி மறைந்துவிட்டது. அதற்குப் பதிலாகத் தோன்றிய “லிபர்ட்டி” என்ற பத்திரிகையும் கோர்ட்டாரால் தடைபடுத்தப்பட்டிருக்கிறது. ஒரே விஷயத்தை இரண்டு வரியில் வர்த்தமானக்குறிப்பாக எழுதினால் அது சாதாரணமாய்ப் போய்விடுகிறது. அதே விஷயத்தைத் தமது சொந்த அபிப்பிராயத்துடன் பத்திராசிரியர் வரைந்தால் உடனே அவருக்குச் சனியன் பிடித்துவிடுகிறது! குறித்த அளவுக்கு மேற்பட்டு ஒரு வார்த்தை சேர்ப்பினும் ஆபத்தாகி விடுகிறது! ஒவ்வொரு பதத்துக்கும் திராசில் நிறுத்தி எடைபார்த்துப் போடவேண்டியிருக்கிறது. இவ்விதம் வெகு கவலையோடும் யோசித்தும் எழுதியும் உழைப்பதிலேயே ஒரு தினத்துக்குள்ள 24-மணி நேரங்கூடப் பத்திராசிரியருக்குப் போதாமற் போய்விடுகிறது. பத்திராசிரியரின் கையிலுள்ள எழுதுகோலும், டாக்டர்—நாவிதன் இவர்களின் கையிலுள்ள கூரிய கத்தியும் சற்று தவறினால் உடனே ஆபத்துதான். என்செய்வது?

***

“பெண்டாட்டி ஆசை தீண்டாட்டத்தில் விட்டது” போல, ஆமதாபாத்தில் 50-வயது முற்றிய புருஷோத்தம தாஸ் என்பவர் 15-வயதுள்ள ராமாபாய் என்ற பெண்ணை விவா

**தாதாவின் கல்யாணத்திற்குத் தடை!**

கம் செய்துகொள்ளப்போக, அதை எதிர்த்துக் கோர்ட்டு வரைக்கும் இந்த சங்கதியை இழுத்துவிட, அதிலே ஜில்லா ஜட்ஜ்—இந்த மனிதனை விவாகம் புரிந்துகொள்வதைவிட ராமாபாய் இறப்பதுமேலென்று—தீர்ப்பு கூறினர். பையனைவிடப் பெண்ணையே எவ்வளவோ அருமையாக வளர்க்கிறார்கள். அவ்விதம் வளர்த்துப் பிறகு படுகுழியில் தள்ள எப்படி மனம் வருகிறதோ தெரியவில்லை. இந்தக் கிழநாற்றத்தை அப்பெண் சகிப்பதைவிட, நரகவாதனை மேல். சிலர் 50-வயதுக்குமேல் விவாகம் செய்துகொண்டு 70-80 வயது வரை இருப்பதுண்டானாலும் கிழநாற்றம் எப்படியும் கிழநாற்றம் தானே! ஆனால் அவர்களுக்குத் தாங்கள் வயோதிகர்களென்ற நினைவில்லை; தங்களைத் தக்க யௌவனமுள்ள வாலிபர்களென்று எண்ணுகிறார்கள். "தாதா" என்று எவரேனும் அழைத்தால் உடனே அவர்களுக்குக் கனத்த கோபம் உண்டாய் விடுகிறது! மனுஷ்யன் சென்றுபோனகாலத்தின் மீதும், இனி வரப்போகிற காலத்தின் மீதும் அதிக ஆசை வைத்தவனாய் அலைகிறான்; தவிக்கிறான்! பாவம்!

"எண்ணெய்ச் செலவொழிய பிள்ளை பிழைத்தபாடு இல்லை" என்பது போல,

**சட்டசபைத் தேர்தல்.** சட்டசபைத் தேர்தலுக்கு நிற்போர் பலரால் வீண் ஆரவாரமேயன்றி, ஜனங்களுக்கு நன்மை கிடைத்த வகை எதுவும் காணோம். தேர்தலில் வெற்றிபெற்றவர்கள் அந்தக் கௌரவ லாபத்தைத் தங்கள் வரையில் அனுபவித்துக்கொண்டு சந்தோஷப்படுவதைத் தவிர, ஜனங்களுக்கு இவர்களால் உண்டாகிற நன்மை வெறும் மேற்பூச்சாகவே இருக்கிறது. சென்னை சட்டசபைத் தேர்தலின் காலம் ஸமீபிப்பதில் அச்சாபீஸ்களுக்கும், ஓட் சேகரிப்பவர்களுக்கும் இனி நல்ல அறுப்புக்காலந்தான்.

***

"பெண்ணுக்குப் பொன்னிட்டுப் பார்" என்பர். பொன்னிலும் கல்வி மாண்புடையது. சென்னை யரசினர் பெண்களுக்கு மூன்றாவது பாரம் வரையில் இலவசக்கல்வி போதிக்க முன்வந்து தீர்மானித்திருப்பது மிகவும் பாராட்டற்குரியதாகும்.

---